


நான்கு பேர் வெகு பதவிசாய் நெஞ்சில் இடம் பிடிக்கிறார்கள். பாலசந்தர், சரிதா, ராஜேஷ், டில்லி கணேஷ்!

ஆலையில் அத்தனை பல் சக்கரங்களும் ஜகஜக என்று இரைச்சலாய்ச் சுழன்று கொண்டிருக்க — திடீரென்று அவை நின்று போக — அது புரியாமல் சரிதா— 'மூக்கைப் பாரு, மூக்கை, முந்திரிப் பழமாட்டம், அப்படியே கடிச்சித் தின்னுலாம் போல' — இளசாய் ஒரு குரலில் சொல்லி மாட்டிக் கொண்டு, அத்தனை பேர் நடுவிலும் அசடு வழியச் சிரித்து விட்டு, கதவுக்குப் பின்னுல் போனதும் சிரிப்பு, மாட்டிக் கொண்ட வேதனையால் அழுகையாய் மாறிப் போகிறதே — அடாடா... மலையருவியின் சாரலை அனுபவிக்கிற மாதிரி என்ன சுகம்! என்ன சுகம்!!!

கல் அட்டிகையை கையில் எடுத்துக் கொண்டு, கழுத்தில் மாட்டிக் கொண்டு, சுற்றிச் சுற்றி வந்து அந்த அட்டிகை சொந்தமானதை நம்பவும் முடியாமல் நம்பாமல் இருக்கவும் முடியாமல், கடைசியில் அத்தனை சந்தோஷத்தையும் அந்த ஒற்றை முத்தத்தில் திணிக்கிறாரே சரிதா— சிலிர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆரம்பத்தில் கண்களில் சிரிப்பும், பேச்சில் குழைவுமாய்ப் பழைய சிவாஜியை நினைவுக்குக் கொண்டு வருகிற அந்த ராஜேஷ், பின்னுல் இயலாமையும், எரிச்சலும், பதவி ஏக்கமுமாய் மாறிப் போகிற போது ஜமாய்க்கிறார்.

ரொம்ப நாளைக்கப்புறம் டில்லி கணேஷிற்கு அருமையான பாத்திரம். பின்னையின் மேல் ஏகமாய்ப் பாசம் கொட்டுவதும், அவன் சீரழிகிற போது இயலாமையில் மனசுக்குள் நொந்து நொந்து அழுவதும் — அசல் நெல்வேலி நயம் சரக்கு.

தூது விடுகிற முதப் பாட்டும், ஆவாரம்பூ பாட்டும் இன்னும் நெஞ்சில் ரீங்காரம் இடுவதைச் சொல்லித்தாளுக வேண்டும். இளையராஜாவின் நிழல் படிந்த கிராமிய இசை. அமைத்திருக்கும் நரசிம்மன் புதுமுக அறிமுகம். பாடல்களை விட 'ரீரெகார்டிங்' இசையில் இனிமை ஒரு மாற்று அதிகம். வளரப்போகிறார்— நிச்சயம்!

கடைசியாக பாலசந்தர் பற்றிச் சொல்வதென்றால் மறுபடி ஆரம்பக் காட்சியிலிருந்து தொடங்கிப் பாராட்ட வேண்டும். எனவே சுருக்கமாக இந்திய அரசியல் பற்றி படம் பண்ணுவது லேட்டஸ்ட் ஃபாஷன். பாலசந்தரின் பார்வையில் நளினமான வித்தியாசமும் இருக்கிறது. விறைப்பும் இருக்கிறது.

ஊருக்கு நல்லது செய்து அன்பாலேயே மரியாதை சம்பாதிக்கிற ஒரு இளைஞன். அவனைக் கட்சி, அரசியல் என்னும் மாயவலையில் சிக்க வைத்து அவன் குடும்ப வாழ்க்கையைச் சிதறடிக்கிறார்கள். அங்குலம் அங்குலமாக அவன் நேர்மையைத் தேய்க்கிறார்கள். சொன்னை களைளனப்படுத்துகிறார்கள்.

பாலசந்தர், பாலசந்தர் தான். சந்தேகமில்லை; சந்தேகமில்லை;

—ஜெயமன்மதன்



# சிலிர்த்தெழும்... சிறிய கிராமம்...

ஓர் இளைஞர் இருங்காட்டுக்கோட்டை கிராமத்தில் சீதாராம் பிரபுவைக் காண வந்தார். ''எனக்கு ஒரு வேலை வேண்டும்; நான் ஒரு பட்டதாரி!'' என்றார் இளைஞர். ''எப்படியோ இந்தக் கிராமத்தைத்தேடி, என்னையும் தேடி வந்தீர்கள். இங்கே அமைந்திருக்கிற தொழில் பகுதிகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு, பிறகு என்னிடம் வாருங்கள்!'' என்றார் சீதாராம். நண்பர் குறிப்பிட்ட தொழில் பகுதிகளைச் சுற்றிப் பார்த்து விட்டு மறுபடியும் அவர் முன்னே நின்றார் இளைஞர்.

—உங்களுக்கு என்ன வேலை தெரியும்? தச்சு வேலை தெரியுமா?

—தெரியாது. இப்போது தான் பார்க்கிறேன்.

—அச்சுத் தொழிலில் அச்சுக் கோப்புத் தெரியுமா?

—சாரி சார், தெரியாது.

—ஊதுவத்தி செய்வது மிக எளிதான வேலை, செய்கிறீர்களா?

—இப்போது தான் சார் பார்க்கிறேன். எப்படிச் செய்ய முடியும்?

—சயன்ஸ் பட்டதாரி ஆயிற்றே நீங்கள்? குறைந்த பட்சம் சோப்பு பற்றிய ரசாயனம் படித்திருப்பீர்கள் இல்லையா?

—படித்திருக்கிறேன்; ஆனால் செய்யத் தெரியாது.

—சரி, இங்கே வேலை பார்க்கிறவர்களுக்கான கான்டீன் ஒன்று இயங்குகிறது. அதில் உணவு தயாரிக்க முடியுமா?

—மன்னிக்கணும் சார். சாப்பிட்டுப் பார்க்கத்தான் தெரியும். சமைத்துப் பழக்கம் இல்லை.

வேலை தேடி வந்த பட்டதாரி இளைஞர், வருத்தத்துடன் திரும்பிப் போய்விட்டார். வெறும் ஏட்டுக்கல்வியுடன், தொழிற் கல்வி ஏதேனும் கற்றுக்கரவேண்டும் என்ற கருத்து எத்தனை நியாயமானது என்று நினைக்கத் தோன்றியது.

அடுத்து வந்தார் ஓர் இளைஞர் சீதாராம்பிரபுவைச் சந்தித்தார் ஒல்லியாகத் துடிப்பாக இருந்தார் அவர்.

—உன் பெயர் என்ன தம்பி?

—கஜபதி, சார்.

—எந்த ஊர்? இதே கிராமமா?

—இல்லே, இங்க பக்கத்திலே இருக்கிற கீவளூர் கிராமமுங்க.

—எதுவரை படிச்சிருக்கே?

—எஸ். எஸ். எல். சி. சார்

—என்ன வேலை செய்வே?

—என்ன வேலை வேணும்னாலும் செய்யறேன் சார், எதுவும் கத்துக்குவேன்!

கீவளூர் கஜபதியிடமிருந்து விண்ணப்பம் எழுதி வாங்கிக் கொண்டார் சீதாராம் பிரபு. பட்டதாரி இளைஞருக்கும் கீவளூர் கஜபதிக்கும் எத்தனை வித்தியாசம்!

இப்போது இருங்காட்டுக் கோட்டை கிராமத்தைக் கவனிப்போம்:

சென்னையிலிருந்து 40 கிலோ மீட்டர் தூரத்தில், சென்னை — பெங்களூர்சாலையில் இருக்கிறது இருங்காட்டுக்கோட்டை நூற்று எழுபத்தைந்து குடும்பங்கள் வசிக்கும் சின்னஞ்சிறுகிராமம். தொண்ணூறு சதவீத மக்களுக்குக் கல்வியறிவு இல்லை; பத்து சதவீதம் பள்ளியிறுதி வரை படிப்பு.


பால்பாயிண்ட் ரீஃபில் தயாரிப்பு மும்முரத்தில் முனியம்மா


திரு. சீதாராம் பிரபு, உதவியாளர்களுடன் ஆலோசனை


ஊதுவத்தி தயாரிக்கிறது



○ ஸ்டீல் நாற்காலிகளுக்கு



○ பிஸ்கட்டும் ரொட்டியும் தயார்!



○ அச்சகத்தில் ''பின்'' அடிக்கிற இளைஞர்

ஓர் எலிமெண்டரி பள்ளி இயங்கி வருகிறது.

- குடிதண்ணீர் வசதி இல்லை. மழையினால் அங்கங்கே நிரம்பும் குளங்கள்தான் எல்லாவற்றுக்கும்.
- நீர்ப்பாசனம் இல்லாததால், ஒரே ஒரு போகம் விளையும் நெற்பயிர்.
- பதினெட்டு முதல் முப்பது வயது வரையுள்ள திடகாத்திரமான ஆண்களும், பெண்களும் கிட்டத்தட்ட இருநூறு பேர் வேலையின்றி, அல்லது வாரம் ஐந்து—பத்து ரூபாய் வரும்படியில் வாழ்க்கை 'ஓட்டுபவர்கள்.'
- வேலை ஏதேனும் தேடிச் சென்னைக்கும், அதன் சுற்றுப்புறங்களுக்கும் வந்துவிடும் குடும்பங்கள். (இப்படி வந்தால் ஏன் நகரைச்சுற்றிச் புதுப் புதுச் சேரிகள் முளைக்காது?)
- மருத்துவ வசதி இல்லை. தேவைப்பட்டால், ஆறு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஸ்ரீபெரும்புதூருக்குத் தான் போக வேண்டும்.

கிட்டத்தட்ட ஓராண்டுக்கு முன்பு இருந்த நிலை தான் இது. இன்று நிலைமையே வேறு.

நாட்டுடைமை ஆக்கப்பட்ட வங்கியொன்று, இரண்டு வருடங்களுக்குமுன் தனது பவள விழா கொண்டாட்டத்தின் போது, கிராம மக்களின் முன்னேற்றத்திற்கு உருப்படியாக ஏதேனும் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் 'ஊரக வளர்ச்சி டிரஸ்ட்' என்றஅமைப்பை நிறுவியது. வங்கியின் சென்னை வட்டார அலுவலகம், பல்வேறு அரசுத்துறை அதிகாரிகளைச் சந்தித்து, ஒரு பின் தங்கிய கிராமத்தைத் தங்கள் வளர்ச்சிப் பணிக்கு ஒதுக்கித் தருமாறு கேட்டுக் கொண்டது.

சரி, கிராமத்தை ஒதுக்கி விட்டார்கள். முதற்படியாக அங்கேயுள்ள இளைஞர்களுக்கும், யுவதிகளுக்கும் வேலை கொடுக்க வேண்டுமே? கிராமத்தில் அதற்குப் பயிற்சி கொடுக்க ஏற்ற இடம் தேவைப்படுமே?

கிராம மக்கள் மனமுவந்து தங்கள் முன்னேற்றத்துக்கு ஒத்துழைப்புத் தந்த போது, அவர்களில் ஒருவரான திரு. நந்த கோபால் ரெட்டியார், டிரஸ்ட்டுக்குச் சுமார் ஒரு ஏக்கர் நிலத்தை நன்கொடையாக வழங்கினார்.

ஆக, இடம் கிடைத்து விட்டது. அப்புறம் கிராமத்தில் தொழில்கள் துவங்க என்ன செய்யலாம் என்று தலையைச் சொறிந்து கொண்டு உட்கார்ந்து விடவில்லை வங்கி அதிகாரிகள்.

பிடித்தாலும் புளியங் கொம்பைப் பிடித்தான் என்பார்களே, அதுமாதிரி கிண்டி, இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியைச் சேர்ந்த கிராமப்புற வளர்ச்சி மையம் (செண்டர் ஃபார் ரூரல் டெவலப்மெண்ட்) என்னும் அமைப்பை அணுகினார்கள். பேராசிரியர் — இயக்குநர் பி. வி. இந்திரேசன், பேராசிரியர் எஸ். இராதாகிருஷ்ணன், திரு. ஆர். ஹரிஹரன் ஆகிய மூவரும் ''என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்!'' என்றார்கள்.

முதலில் கிராமத்தின் மையத்தில், நன்கொடையாகக் கிடைத்த நிலத்தில் உறுதியாக — எந்தப் புயல் காற்றுக்கும் அசையாத— கட்டடங்கள் கட்டிக் கொடுத்தது ஐ. ஐ. டி. செங்கல் உபயோகிக்காமல், மேலே தளத்துக்குப் போடுகிற மாதிரி ஒயர் மெஷ்ஷும் சிமெண்ட்டும் உபயோகித்துக் கட்டப்பட்டவை. கூரைக்கும், முன்புறத்துக்கும் தகடுகளை வைத்து முடுக்கியிருக்கிறார்கள். ஏழடி உயரத்துக்கு மேல் இரும்புக் குழாய்களைக் குறுக்கு — நெடுக்காய்ப் பொருத்தி. மேலேயும் பொருத்தி. மேலேயும் ஒரு தட்டு — மரப்பலகைகளால் ஆனது — போட்டுக்கொடுத்திருக்கிறார்கள். முதல் மாடியில் கூடுதலாக இப்படி இடம் கிடைத்ததில் உற்பத்தி செய்வதற்கான கச்சாப் பொருட்களையும், உற்பத்தி செய்த பொருட்களையும் பாதுகாப்பாக வைக்க முடிகிறது. சிக்கனம்

செலவில் மட்டுமே. கட்டிடம் உறுதி, இடத்தையும் அடைப்பதில்லை.

சோப்பு, சோப்புத்தூள் தயாரிக்கக் கலவை முறைகளை வழங்கியிருக்கிறது ஐ. ஐ. டி. அதுபோலவே பேக்கரியில் பன், ரொட்டி, பிஸ்கட் தயாரிக்க, தச்சுப்பட்டறையில் மரச் சாமான்கள், அச்சகத்தில் பயிற்சி என்று இருங்காட்டுக் கோட்டையில் இறங்கியிருக்கிறது இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியின் யோசனைகள், உதவிகள்.

இனி, தேவைப்படும் மூலதனம். ஹியூமன் ரிசோர்சஸ் டெவலப்மெண்ட் பிராஜெக்ட் எனப்படும் HURED நிறுவனத்தை அமைத்து நிர்வகிக்க, சுமார் ஒன்பது லட்சம் ரூபாயை இந்த வங்கி தனது பூந்தமல்லி கிளை வழியாக, பவள விழா ஊரகடிரஸ்ட்டுக்குக் கடனாக வழங்கியிருக்கிறது. இதன் மூலம்

தச்சுப்பட்டறையில் மேசை, நாற்காலிகள், மர விளம்பரத் தகடுகள்;

நெசவுப் பகுதியில் லுங்கிகள்;

கெமிகல் பகுதியில் சோப்பு, சோப்புத்தூள்;

இரும்பு — வெல்டிங் பகுதியில் ஸ்டீல் நாற்காலிகள்;

அச்சகப்பிரிவு;

ஊதுவத்தி தயாரிப்பு;

பால்பாயிண்ட் பேனா ரீஃபில் தயாரிப்பு;

பேக்கரிதொழிற்சாலை.

என்று இங்கே தொடங்கப்பட்டன. சுற்றிலும் குடிசைகளில் வாழ்ந்து வரும் இருங்காட்டுக் கோட்டை கிராம மக்களில் அறுபத்தொரு பேர் மேற்கண்ட பல துறைகளில் பயிற்சியும் பெற்று ஸ்டைபென்டோ, சம்பளமோ பெற்று வருகின்றனர். (இது தவிர ஒவ்வொரு வீட்டுக்கும் ஒவ்வொரு வகைக் கடன் உதவி அளிக்கப்பட்டிருக்கிறது.) ஒவ்வொரு தொழில் பகுதிக்கும் CRD, ITI ஆகியவற்றில் பயிற்சி பெற்ற இளைஞர்கள், படிப்பு—பயிற்சி இல்லாத இந்தக் கிராம மக்களுக்கு அவர்கள் சேரும் துறையில் போதிய பயிற்சி அளித்து வருகிறார்கள். பொறுமையுடன் கிராம இளைஞர்களுக்கு வேலைகளைக் கற்றுக்கொடுப்பதுடன் கூடவே உழைக்கிறார்கள். 'டிரான்ஸ்ஃபர் ஆஃப் டெக்னாலஜி டு வில்லேஜ்' என்ற ஆளையயர்த்தி விடுகிற ஆங்கிலச் சொற்றொடர், இங்கே எளிமையாக, செயல் வடிவில் நிதர்சனமாகத் தெரிகிறது.

கம்போஸிங் கற்றுக் கொண்ட போலன், ஆரம்பத்தில் மண் வேலை செய்து கொண்டிருந்து விட்டு, இப்போது டிரெடில் அச்சு யந்திரத்தை இயக்கும் மனோகரன், உடல் ஊனமுற்ற வேலு, ப்ளஸ்டு படித்த பழனிச்சாமி என்று உற்சாகம் ஊற்றாகப் பொங்கி எழ, சுறுசுறுப்புடன் ஒவ்வொரு துறையிலும் இயங்கும் இந்தக் கிராம மக்களைப் பார்த்தால், நம்பிக்கை துளிர்க்கிறது.

இளைஞர் அசோகன், பேக்கரியில் ரொட்டியும், பன்னும், பிஸ்கெட்டும் செய்வதோடு நிற்பதில்லை. அருகிலுள்ள ஊர்களுக்கு எடுத்துப் போய்க் கடைகளில் விற்றுக் காசையும் வாங்கிக் கொண்டு வருகிறார். தயாரிப்பில், தரத்தில் குறைகள் இருந்தால் அதையும் காதில் வாங்கிக் கொண்டு சூபர்வைசரிடம் தெரிவிக்கிறார்.

'பூஜா ஸ்பெஷல்', 'சுகந்த மலர்' ஊதுவத்திகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறதாம். 'சுகந்த்' சலவை சோப்பு, சலவைத்தூள் அருகிலுள்ள கிராமங்கள், சிற்றூர்களுக்கு விற்பனைக்குப் போவதுடன், பிற நகரங்களிலிருந்தும் ஆர்டர்கள் வருகின்றன.

மேற்படி தொழில்களுக்குத் தேவையான மின்சாரத்திற்காக முப்பத்தைந்தாயிரம் ரூபாய் செலவில் ஒரு 7.5 KVA திறனுள்ள ஜெனரேட்டரை இயக்குகிறார் உதயகுமார்.

—ஏன், மின் வாரியம் உங்கள் உதவிக்கு வரவில்லையா?

—முயன்று கொண்டிருக்கிறோம். கொடுத்தால் நல்லது. எல்லா யூனிட்டுகளும் இடைவிடாது இயங்கும்.

---

## அடுத்தவாரம்

மாண்பமை நீதிபதிகள் கைலாசம், செங்கோட்டுவேலன், சிங்காரவேலு, ரத்னவேல் பாண்டியன், மோகன் ஆகியோர் சொல்கிறார்கள்.



# மறக்கமுடியாத வழக்குகள்



கல்கி துணை ஆசிரியர் திரு பி.எஸ். மணி அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி கீதாவுக்கும் புதுதில்லி பாங்க் ஆப் இந்தியாவைச் சேர்ந்த சிரஞ்சீவி டி. எஸ். இராமனுக்கும் தியாகராயநகர் பாலாஜி கல்யாண மண்டபத்தில் அதிவிமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்கு நண்பர்களும், உறவினர்களும், எழுத்தாளர்களும், ஓவியர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்.

# நாளெல்லாம் நறுமணம்
# சுகந்தியின் சந்தன மணம்




சுகந்தி

சாண்டல் டால்கம்
பவுடர் & சாண்டல்வுட்
ஃபேஸ் பவுடர்

இது ஒரு தூய
சந்தனக் கலவை

ஜே. டி. எஸ். கெமிகல்ஸ், சென்னை-600 021

LOOK/S:13




கல்கி

1984 ஜூன் 10
மலர் : 42 இதழ் : 45
ரக்தாக்ஷி வைகாசி 28




# பொன்னையன் உதிர்த்த பொன்மொழிகள்!

“தமிழகத்தில் தொழிலகங்கள் தொடங்க விரும்புவோருக்குத் தமிழக அரசு பூரண ஒத்துழைப்புத் தரும். காலதாமதங்கள் இராது. தொழிலதிபர்களை இங்குமங்குமாகப் பந்தாடுதல் இராது. லைசென்ஸ் வழங்குதல், மின் வசதி, நீர் வசதி, கடன் வசதி போன்ற அனைத்தையும் தொழிலதிபர் ஒரே இடத்தில் பேசி முடித்துக் கொள்ளலாம். இதில் சிவப்புநாடா, லஞ்ச ஊழல் போன்றவை எட்டிப் பார்க்கவும் அனுமதிக்க மாட்டோம். தொழிலாளரின் வேலைநிறுத்தம் போன்றவற்றால் உற்பத்தி பாதிக்கப்படக் கூடாது. தொழிலாளரின் உரிமைகளை மதிக்கும்போதே அவர்களின் கடமைகளையும் உணர்த்துவோம்!”

பொன்னையன் உதிர்த்த மேற்படி பொன்மொழிகளைப் பார்த்தால் தமிழகத்தில் ஒரு பொற்காலம் உதயமாகப் போகிறது என்றே தோன்றும். சொல்வதோடு நிற்காமல் செயல்படுத்திக் காட்டினால் ‘தொழில்வளப்பெருக்கத்தில் இரண்டாவது இடம்’ என்ற தனது பழம் பெருமையைத் தமிழகம் திரும்பப் பெறவும் கூடும்.

தமிழகத்தின் தொழில் வளர்ச்சியில் டி. வி. எஸ். என்ற மூன்றெழுத்து மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. டி. வி. எஸ். குரூப் நிறுவனங்களுள் ஒன்றான சுந்தரம் கிளேட்டன் ரயில்வேக்களுக்குத் தேவைப்படும் பல பொருள்களைத் தயாரிக்க ஒரு புதிய தொழிலகத்தை ஹோசூர் அருகே ஹரிதாவில் தொடங்கியுள்ளது. இதன் திறப்புவிழாவில் பேசும்போதுதான் மேற்கூறிய மணியான கருத்துக்களை உதிர்த்துள்ளார் பொன்னையன்.

அமைச்சர் சொன்னதில் புதிய விஷயம் ஏதுமில்லை. ஏற்கெனவே பலர் கூறி வந்துள்ள, தொழில் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான அடிப்படை அம்சங்கள்தான். ஆனால் அமல்படுத்தும் ஆர்வமும் முனைப்பும்தான் காணப்படவில்லை. பொன்னையனேனும் விதிவிலக்காக நடந்து கொள்வாரேயானால் தமிழக வரலாற்றில் பொன்னெழுத்தில் அவர் பெயர் பொறிக்கப்படும்.

சமீபத்திய குஜராத் சிறப்பிதழில் தொழில் வளர்ச்சியில் எட்டாவது இடத்திலிருந்த குஜராத் எப்படி எட்டாத இடத்துக்கு உயர்ந்து விட்டது என்பதை விவரித்து எழுதியிருந்தோம். குஜராத்தின் இந்தச் சாதனைக்கு உறுதுணையாக இருந்தவர்கள், இருப்பவர்கள் அரசாங்கத்திலும் தொழில், வர்த்தக நிறுவனங்களிலும் முக்கியமான பதவிகளை அலங்கரிக்கிற பல தமிழர்களும் கூட என்பதைக் குஜராத்தியரே மகிழ்ச்சியோடும், நன்றியோடும் ஒப்புக் கொள்கின்றனர். அவ்வாறிருக்க, தமிழ்நாட்டைத் தமிழர்களால் உயர்த்த முடியவில்லை என்றால் மானக்கேடல்லவா? குறுகிய மனப்பான்மைகளை விட்டொழித்து அறிவாற்றலையும் செயல்திறனையும் கண்ட இடத்தில் மாநிலத்தின் முன்னேற்றத்துக்காக அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

மக்களின் சுபிட்சம் மட்டுமின்றி சுயகௌரவமும் அதிகரிக்கின்ற வேலைவாய்ப்புக்களிலேதான் இருக்கிறது. நிலப்பட்டா, இலவச சீருடை, மதிய உணவு, வேட்டி, புடவை, வேலையற்றோருக்கு உதவித்தொகை போன்ற தற்காலிகத் துயர் துடைப்பு அம்சங்களில் இல்லவே இல்லை.

தாயென்று கும்பிடு பாப்பா — பாரதியார்

# பூவெக் கனவு

## அத்தியாயம் 9

**செ**ண்பகத்தின் துயரமோ வேதனையோ, திருமலையின் வளர்ச்சியைப் பாதிக்கவில்லை. அவள் தேய்ந்து துரும்பிடித்துக் கொண்டிருப்பதை உணரவோ, புரிந்து கொள்ளவோ நேரமின்றியே அவன் வளர்ந்து கொண்டிருந்தான். சண்பகத்தின் வசதிகள், பொருளாதாரத் தேவைகள் கவனித்துக் கொள்ளப்பட்டன. திருமலையிடமிருந்து வாழ்க்கை மட்டும் கிடைக்கவில்லையே ஒழியப் பணமும் வசதிகளும் அவளுக்குக் கிடைத்தன.

மேடை நாடகங்கள் மூலம் கொள்கைகளையும் இலட்சியங்களையும் பரப்ப வேண்டுமென்ற முனைப்பு அவனது இயக்கத்தில் அதிகமாயிற்று. விதவை மறுமணம், இந்தி எதிர்ப்பு, சநாதன எதிர்ப்புக் கொள்கைகளை உள்ளடக்கி 'வேரிற் பழுத்த பலா' —என்ற நாடகத்தைத் திருமலை எழுதி அரங்கேற்றினான். அதில் எதுகை மோனை நயத்தோடு அவன் எழுதியிருந்த வசனங்கள் காட்சிக்குக் காட்சி கைத்தட்டலைப் பெற்றன. அவனே அதில் முக்கியப் பாகமேற்று நடிக்கவும் செய்தான். முதல் முதலாக அவனுக்குப் பழக்கமான அந்த அழகிய பெண்ணும் அதில் நடித்தாள்.

---

''என்னங்க... ஒரு ஆபீஸ்லஇருந்து வரும்போது 'மானேஜரை'க் கூட்டி வரதா ஃபோன் பண்ணிச் சொன்னீங்களே...?''

''ஆமி... ஆமி... இன்னிக்கு கொஞ்சம் நல்லா... டேஸ்டா சாப்பிடலாமேன்னுதான்...!''

—எல். ஆர். ராரூபால்சர்.



'செந்தமிழ்ச் சிட்டுக்கள் சீர்திருத்தப் பனுவல் பாடும் பைந்தமிழ் நந்தவனம் — நமக்கோர் சொந்தவனம்' — என்பதுபோல் அவன் அதற்கு எழுதியிருந்த வசனங்கள் மக்களைப் பெரிதும் கவர்ந்தன.

''செந்தமிழ்ப்பூஞ்சிட்டுக்களேநீங்கள்
திராவிடப் பூங்காவில் வந்தாடுவீர்
தென்னவர் எதிரியைப் பந்தாடுவீர்

என்பது போல் அவன் எழுதியிருந்த பாடல் ஒன்று மிகவும் புகழ் பெற்று விட்டது. மேடைக்கு மேடை அதைப்பாட ஆரம்பித்து விட்டார்கள். 'நமது இயக்க வீரர் திருமலை எழுதிய 'செந்தமிழ்ப் பூஞ்சிட்டுக்களே' என்ற பாடல் மிக அருமையாக, செழுமையாக — எளிமையாக — வலிமையாக — இயக்க உணர்வுகளை எடுத்தியம்புவதாய் அமைந்து விட்டது. அப்பாடல் தலைசிறந்தது— கலை சிறந்தது — நிலையுயர்ந்தது. இரு வீடமெங்கும் ஒரு இடமும் விடாமல் ஒலிக்க வேண்டிய பாடல் அது என்பதை நீ உணர்ந்திட வேண்டும் தம்பி' — என்பதாக நூறாவது நாடகத்துக்குத் தலைமை வகித்து அது திருச்சி தேவர் மன்றத்தில் நடந்தபோது அவன் பேரறிஞர் பெருந்தகையாய்க் கருதிய அண்ணனே புகழ்ந்தபின் அவனுடைய மதிப்பு மேலும் அதிகமாகி விட்டது. அதை ரெக்கார்டு ஆகப் பதிவு செய்து இயக்கக் கூட்டங்களில் எல்லாம் ஒலிபரப்பினார்கள். அண்ணனின் அபிமானத்துக்குரிய பாடல் என்பதால் அது பெரும் புகழ் பெற்றது. பெரும் பொருள் ஈட்டியது.

இயக்க உணர்வுகளைப் பிரதிபலிக்கும் வசனங்களும், பாடல்களும், நாடகங்களிலும் மேடைகளிலும், திரைப்படங்களிலும் அமோக வெற்றியைப் பெற்றுக்கொண்டிருந்த காலம் அது.

தங்கள் இயக்கப் போராட்டங்களில் அவன் முன்னணியில் நின்றான். 'டால்மியாபுரம் என்ற பெயரைப் 'புளியமரத்துப் பட்டி' என்ற அதன் பழைய நிலைக்குமாற்றுவதற்காக அந்த நிலையத்தில் ரயிலுக்குமுன் மறியல் செய்து தண்டவாளத்தில் தலை வைத்துப் படுத்த முன்னணி வீரர்களில் அவனும் ஒருவனாயிருந்தான். என்றாலும் தனக்கு முறையான படிப்பில்லை என்பதை உணரும் போதும், உணர்த்தப்படும்போதும் அதை உணர்த்தியவர்கள் மீது அவன் படமெடுத்து ஆடி விஷம் கக்குவதற்குத் தயங்கியதில்லை.

உள்ளூர்த் திருக்குறள் கழகத்தில் ஒரு முறை அவனைப் பேசக் கூப்பிட்டு அவன்.

''திருக்குறளின் நாலாயிரம் பாடல்களிலும் தமிழ்ப் பண்பாடு தகத்தகாயமாய் மின்னிடுதல் கண்டு பெருமிதப்படுகிறோம் நாம். தமிழினத்தின் வெற்றி இது'' — என்று இடிக்குரலில் முழங்கிய போது, கூட்டத்திலிருந்து ஒரு குரல் இடைமறித்தது. அள்ளி முடித்தகட்டுக்குடுமியும் பட்டைபட்டையாய் விபூதிப் பூச்சுமாயிருந்த ஒரு நடுத்தர வயது மனிதர், ''திருக்குறளை ஒருதரம் புரட்டிப் பார்த்து விட்டாவது பேச வரக் கூடாதா அப்பா''—என்று கேட்டுவிடக்கூட்டமே கொல்லென்று சிரித்து விட்டது. திருக்குறளில் இருப்பதே மொத்தம் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் தான் என்ற விவரம் அன்று வரை அவனுக்குத் தெரியாது. இந்த மாதிரித் தர்ம சங்கடமான நிலைமைகளைத் தவிர்க்க எண்ணி யாரிடமாவது கொஞ்சம் முறையாகத் தமிழ் படிக்க எண்ணினான் அவன்.

யாரிடம் தமிழ் படிக்கலாம் என்று யோசித்த போது எழிலிருப்பு நகரின் தமிழ்ப் புலவர்கள் ஒவ்வொருவராக அவனது நினைவுக்கு வந்தனர்.

'உள்பட்டணம் சித்தாந்த ரத்நாகரம் செவ்வடிவேல் உடையார், 2. அஷ்டாவதானம் அரியநாயகத் தேவர், 3. புலவர்—பண்டித வித்வான் — வேணுகோபாலசர்மா.

இந்த மூவரில் செவ்வடிவேல் உடையார் திருமலையின் பேரைக் கேட்டாலே சிவசிவ என்று காதைப் பொத்திக் கொள்வார். தேவருக்கும் அவனுக்கும் ஒத்து வராது. ஒய்வு பெற்ற டிஸ்ட்ரிக் போர்டு தமிழாசிரிய ரான சர்மாவிடம் கற்கலாம் என்றால் கொஞ்சம் தயக்கமாயிருந்தது. பாமர மக்கள் தன்னையே பெரும் புலவர் என்று நினைத்துக் கரகோஷம் செய்கிற அளவு புகழுள்ள தான் போய் ஊர் பேர் தெரியாத சர்மாவிடம் தேடித் தமிழ் கற்பாத



என்று கூச்சமாகக் கூட இருந்தது. ஆனால் சர்மா பயந்த சுபாவமுள்ளவர். வரச் சொல்லிக் கூப்பிட்டனுப்பினால் கூட வந்து விடுவார். வறுமையில் சிரமப்படுகிறவர். கொஞ்சம் பண உதவி செய்தால் கூட அதிகம் இழுத்த இழுப்புக்கு வருவார். தேடிப் போய்க் கற்க அவசியமில்லாமலே வந்து சொல்லிக் கொடுத்து விட்டுப் பணத்தை மரியாதையாக வாங்கிப் போவார். பணிவாகவும் இங்கிதமாகவும் நடந்து கொள்வார்.

உள்பட்டண விரோதியான அவனுக்கு உடையார் சொல்லிக் கொடுக்க மாட்டார். தேடி வந்து கும்பிட்டுக் காலில் விழுந்தாலொழியத்தேவர் அவனைப்பொருட்படுத்தவே மாட்டார். சுயமரியாதைக்கு இழுக்கு இல்லாமல் சர்மாவிடம் தான் கற்க முடியுமென்று இருமலைக்குத் தோன்றியது. ஓர் ஆளிடம் சொல்லிச் சர்மாவைக் கூப்பிட்டனுப்பினான். சர்மா உடனே ஓடோடி வந்தார்.

''என்ன கூப்பிட்டனுப்பிச்சேளாமே?''

''ஆமா... இருங்க... பேசலாம்...''

''உங்களுக்கு இப்ப வேலை ஜாஸ்தின்னா அப்புறமா வேணா வந்து பாக்கறேனே? நிறையப் பேர் தலைவரைப் பார்க்கணும்னு இங்கே வெளியிலே காத்திண்டிருக்காளே...?''

''உங்ககிட்டக் கொஞ்சம் தனியாப் பேசணும்... எல்லாரையும் இன்னொரு நாள் வரச் சொல்லி அனுப்பிடறேன்''–

''உங்க இஷ்டம்.''

இருமலை ஒரு தொண்டனைக் கூப்பிட்டு, ''இந்தா, அந்த ஆளுங்களை எல்லாம் இன்னொரு நாள் வரச் சொல்லித் திருப்பி அனுப்பு. உள்ளார யாரையும் விட்டுறாதே... நான் இவருகிட்டத் தனியாகக் கொஞ்சம் பேசணும்.''

''சரிங்க...''

அவன் போனதும் கதவை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டபின் இருமலை அவரிடம் தயங்கித் தயங்கித் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். கேட்டு விட்டுச் சர்மா சிரித்தார்.

''ஏன் சிரிக்கறீங்க சாமீ?''

''தயவு செய்து என்னைச் சாமீன்னு கூப்பிடாதீங்கோ! எனக்கு அது பிடிக்காது! சார்னாலே போதும். சார் பிடிக்கலேன்னா ஐயான்னு சொல்லுங்கோ. இதெல்லாம் உங்களுக்கு அவசியமான்னு நினைச்சேன். சிரிப்பு வந்துடுத்து. நீங்க தான் தமிழ்லே சரமாரியா மேடையிலே பேசறேளே. இன்னும் என்ன கத்துக்கணும்?''

''முறையா இலக்கண இலக்கியம்லாம் தெரியணும்.''

''அதுக்கு வேண்டிய பொறுமையும் அவகாசமும் உங்களுக்கு இருக்கா?''

''இருக்கோ இல்லியோ... உண்டாக்கிகிட்டே தீரணும்! நான் ஊர்லே இருக்கிறப்பல்லாம் ஆளனுப்பறேன். ஒருநடை வந்திட்டுப் போயிடுங்க... மாசம் அம்பது ரூபா குடுத்திடறேன். ஆனா ஒரே ஒரு கண்டிஷன்...''

''என்ன கண்டிஷன்...?''

''நான் உங்ககிட்ட ட்யூஷன் படிக்கிறேன்னு யார்கிட்டவும் மூச்சு விடப் படாது...''

''......''

''வேணும்னா நட்பு முறையிலே நானும் இருவும் அடிக்கடி சந்திச்சுப் பேசறதுண்டுன்னு சொல்லிக்குங்க. எனக்கு அதிலே ஆட்சேபணை இல்லே. தலைவர் திரு சர்மாகிட்ட ட்யூஷன் படிக்கிறாராம்னு எனக்குக் கெட்ட பேராயிடப்படாது.''

'இதுல கெட்ட பேருக்கு என்ன இருக்கு?' —என்று கேட்க நினைத்துக் கேட்காமலே அடக்கிக் கொண்டார் சர்மா. அன்றைய நிலையில் மாதம் ஐம்பது ரூபாய் என்பது அவருக்குப் பெரிய வரவு. அந்த வரவை இழக்க விரும்பாமல் சம்மதித்தார் அவர். படிக்க ஆசை. அதேசமயம் இன்னொருவரிடம் படிக்கிறோம்என்பது வெளியேதெரியக்கூடாது என்று ஒரு கூச்சம். அவன் சரியான அரசியல் வாதியாக நடந்து கொண்டான்.

மாதத்தில் நாலைந்து நாள் தான் அந்த ட்யூஷன் சாத்தியமாயிற்று. மற்ற நாட்களில் இருமலைக்கு நேரம் கிடைக்கவில்லை. செந்தமிழ் நாவலர் என்று மக்கள் தனக்குச் சிறப்புப் பட்டம் கொடுத்துத் தன்னைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்போது தான் ஓர் ஓய்வு பெற்ற தமிழ் வாத்தியாரிடம் படிக்கிறோம் என்பது வெளியே சிறிதும் தெரிந்து பரவி விடக் கூடாது என்பதில் அவன் மிகவும் விழிப்பாகவும் எச்சரிக்கையாகவும் இருந்தான். அதற்காக அதிகக் கவனம் எடுத்துக் கொண்டான்.

யாப்பிலக்கணம் படிக்கையில் ''அகர முதல எழுத்து எல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு'' — என்று குறளை அவன் கைப்பட எழுதி அசை, சீர், தளை பிரித்துக் காட்டச் சொல்லி அவனுக்கு ஒரு 'ஹோம் ஒர்க்' கொடுத்திருந்தார் சர்மா. அகற முதள எளுத்தெள்ளாம் ஆதி பகவண் முதற்றே உளகு'' என்று இருமலை அதைப் பதிலுக்கு எழுதியிருந்த இலட்சணத்தைப் பார்த்துச் சர்மாவுக்குப் பகீரென்றது. தமிழில் இவ்வளவு எழுத்துப் பிழையோடு எழுதுகிற ஒருவனை மக்கள் 'செந்தமிழ் நாவலர்' என்று அழைக்கத் துணியும் அளவிற்குப் பாமரர்களாகவும் ஒன்றை உணர்ச்சிப் பூர்வமாக மட்டுமே கண்ணை மூடிக் கொண்டு அளந்து முடிவு செய்கிறவர்களாகவும் இருந்தது சர்மாவுக்கு வியப்பை அளித்தது. அன்றிலிருந்து இருமலையை நிறைய எழுதச் செய்து இருத்திக் கொடுக்கத் தொடங்கினார் அவர். சர்மாவின் அடக்கமும் தனக்குச் சொல்லிக் கொடுப்பதை இரகசியமாக வைத்திருக்கும் குணமும் இருமலையைக் கவர்ந்ததால் அவரது டியூஷன் மாதச் சம்பளத்தை எழுபத்தைந்து ரூபாயாக உயர்த்தினான் அவன். அவரை அவனுக்கு மிகவும் பிடித்துப் போயிற்று.

அந்த ஆண்டின் இறுதியில் இருமலையின் இரண்டாவது கொள்கைப் பரப்பு நாடகமாகிய 'திராவிட முழக்கம்' அரங்கேறிச் சக்கைப்போடு போட்டது. முதல் நாடகமாகிய 'வேரிற் பழுத்த பலா' வை விட, இதற்கு அதிக வரவேற்பு இருந்தது. இந்தப் புதிய புகழ் வேறொரு பளபளப்பான மாறுதலுக்கு அவனை விரைந்து இட்டுச் சென்றது.

(தொடரும்)

## படித்துப்பாருங்கள்



# ஒருமைப்பாட்டுக்கு ஓராயிரம் பாலங்கள்

சென்னையில் உலகத் தமிழ்மாநாடு நடைபெற்ற நேரம்... வெளிநாடுகளிலிருந்தெல்லாம் தமிழ் தெரியாதவர்கள் வருகிறார்களே, அவர்களுக்கு உதவியாக இருக்கட்டும் என்று ஆங்கிலம் மூலம் தமிழ் கற்பிக்கும் புத்தகம் ஒன்றை வெளியிட்டார்கள். டாக்டர் ஜாகிர் உசேன் அவர்கள் வெளியிட்டு வைத்த அந்த நூல் இப்போது பதினைந்தாம் பதிப்பு வந்து விட்டது. தொடர்ந்து பாலாஜி பதிப்பகத்தினர், தெலுங்கு மலையாளம், கன்னடம், பஞ்சாபி, குஜராத்தி, ஒரியா என்று பதினான்கு மொழிகளையும் எளிய முறையில் கற்றுக் கொள்வதற்கான நூல்களை வெளியிடும் அளவுக்குத் துணிவு பெற்றார்கள். ஆங்கிலத்தின் மூலமாக மட்டுமின்றி, தமிழ், தெலுங்கு, மலையாளம். கன்னடம் – இந்த மொழிகளின் வாயிலாகவும் மற்ற மொழிகளைக் கற்றுத் தரத் தனித்தனியே புத்தகங்களை வெளியிட்டு ஏராளமான பல்மொழிப் பாலங்களை இவர்கள் நிர்மாணித்திருப்பது அசுர சாதனை.

ஜப்பானிலிருந்து ஒரு தொழிலதிபர் சில டாலர்களை அனுப்பி, எழுதியுள்ள கடிதம் சுவையானது. சிங்கப்பூர் சென்ற போது ஆங்கிலம் மூலம் மலையாளம் புத்தகத்தைவாங்கிப் படித்திருக்கிறார். அது அவரைக் கவர்ந்திருக்கிறது. ''ஆங்கிலம் மூலம் வங்காளி நூல் இருந்தால் அனுப்புங்கள். மற்றவர்களின் வெளியீடுகளை விட உங்களுடையது நன்றாகப் புரியும்படி இருக்கிறது.'' என்று பாராட்டி, குறிப்பிட்ட அந்தத் தொகைக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவுபுத்தகங்களை அனுப்பச் சொல்லி எழுதியிருந்தார்.

ஐந்து கண்டங்களிலும் பல்வேறு நாடுகளில் இவர்களுடைய புத்தகங்களுக்கு விற்பனையாளர்கள் இருக்கிறார்கள். ஆங்கிலம் மூலம் சம்ஸ்கிருதம் நூல்களுக்கு வெளிநாடுகளில் நிறைய கிராக்கி இருக்கிறதாம்.

ஆங்கிலம் மூலம் தமிழ் கற்பிக்கும் புத்தகத்தைத் தென் ஆப்பிரிக்க டர்பனில் இவர்களுடைய அனுமதியுடன் ஒரு நிறுவனம் தானே அச்சிட்டுக்கொண்டு விட்டது.

''இந்த மாதிரி செய்வது உங்களுடைய விற்பனையைப் பாதிக்காதா?'' என்றுகேட்டால், ''அதற்கென்ன செய்வது... எப்படியோ நம்முடைய மொழி பரவுகிறதே...'' என்கிறார் பாலாஜி பப்ளிகேஷன்ஸைச் சேர்ந்த திரு. ஞானகிராமன்.



கே. ஞானகிராமன்

தேசிய ஒருமைப்பாட்டுக்கு ஆக்க பூர்வமான பணிகளை நிறைவேற்றியிருக்கும் இந்த நிறுவனத்தை ஜனாதிபதி முதல் சாதாரண ஜனங்கள் வரை பாராட்டி வாழ்த்தியிருக்கிறார்கள். இருந்தும் அரசாங்கத்தின் உற்சாகமோ ஆதரவோ இவர்களுக்குக் கிடைக்கவில்லை.

''இது ஒரு குறையாகத் தோன்றவில்லையா?'' என்றால், ''பொது மக்கள் நிறைய ஆதரவு தருகிறார்கள். பல்கலைக் கழகங்களெல்லாம் புத்தகங்களை நிறைய வாங்குகின்றன. வெளிநாடுகளிலிருந்தெல்லாம் அமோக ஆதரவு கிடைக்கிறது.... போதுமே...'' என்று நிறைவோடு கூறுகிறார் ஞானகிராமன்.

கையைக் கடிக்கிற சமாசாரமும் உண்டு. ''ஒரியா மொழி கற்பிக்கும் பாடப் புத்தகம் போட்ட வகையில் நஷ்டம் முப்பதாயிரம் ரூபாய். ஆனாலும், அந்த மொழியையும் விட்டுவிடாமல் புத்தகம் போட்டுவிட்டோம் என்கிற பெருமை இருக்கிறதே...'' என்கிறார் இவர்.

அண்ணாசாலையில் புக் கார்னர் என்று புத்தகக் கடை வைத்திருந்த போது கிடைத்த விற்பனை அனுபவம் தான் 'பாலாஜிபப்ளிகேஷன்ஸ்' உருவாக உதவியது. பொது மக்கள் எந்த மாதிரியான புத்தகங்களை வாங்குகிறார்கள் என்பதைக் கவனித்த போது, கதைப் புத்தகங்களை விடத் தொழில் சம்பந்தமான நூல்களே முதலிடம் பெறுகின்றன என்பதைக் கவனித்தார். ரேடியோ டி.வி. மெக்கானிசம், மோட்டார் மெக்கானிசம், லேத்வேலைகள், வெல்டிங் வேலைகள் என்று தமிழ் மூலம், தெலுங்கு மூலம் கற்பிக்கிற நூல்களின் வரிசையைவெளியிட முடிவு செய்தார்.

இந்த மாதிரித் தொழில் நுட்ப அறிவு சம்பந்தமான புத்தகங்களில் எல்லாம் ஆசிரியர் 'மின்னணு' என்று போட்டிருக்கும். 'மின்னணு' என்பது தனிப்பட்ட ஒருவருடைய பெயர் இல்லை. பலர் எழுதினாலும், இந்தப் பொதுப் பெயரில் தான் வெளியிடுகிறார்கள்.

''சினிமா ஆபரேடர் பயிற்சியும், புரொஜக்டர் மெக்கானிசமும்'' போன்ற இந்தப் புத்தகங்கள், அதிகம் படிப்பில்லாத சாதாரண நிலையில் உள்ளவர்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தில் எளிய முறையில் இருக்க வேண்டும் என்பதில் நிறைய கவனம் செலுத்துகிறார்கள்.

அண்மையில் இவர்கள் வெளியிட்டுள்ள நூல் ஒன்று ''மது அருந்தக் கூடாது... ஏன்?'' என்ற தலைப்பு கொண்டது. பழைய புத்தகக் கடையில் கிடைத்த ஒரு ஆங்கிலப் புத்தகம்... 1915-இல் அமெரிக்காவில் வெளியானது. மதுப்பழக்கத்தின் தீமைகளை விளக்கும் இந்த நூலைத்தான் தமிழாக்கமாக்கி வெளியிட்டிருக்கிறார்கள். வியாபாரம் மட்டுமல்ல; ஓர் அறப்பணி என்றே இதைச் சொல்ல வேண்டும். இந்த நூலிலிருந்து ஒரு துணுக்கு:

**யாருடைய பையன்?**

'மெர்சி நதியிலே மூழ்கிச் செத்துப்போன ஓர் இளைஞனின் உடல் காணப்பட்டது. அவனுடைய சட்டைப் பையில் ஒரு கடிதம் இருந்தது.

'என் பேரைக் கேளாதீர்கள். என்னை அழுக விட்டு விடுங்கள். குடி தான் என்னை இங்கே கொண்டு வந்து விட்டது''

அவன் உடல் அடையாளங்களையும் இந்தக் குறிப்பையும் விளம்பரப் படுத்தினார்கள். மூன்று நாட்களில் ஏறக்குறைய முந்நூறு கடிதங்கள் பெற்றோர்களிடமிருந்து வந்தன. அவன் தங்கள் மகனாக இருக்கலாமோ என்று வேதனையோடு விசாரித்து எழுதப்பெற்ற கடிதங்கள் தாம் அவை.

—சுப்ரபாலன்

# பா+பா ஒற்றுமை

பாலசந்தரின் பாணி வேறு; பாக்யராஜின் பாணி வேறு என்றாலும் தெரிந்தோ தெரியாமலோ, கே. பி. தலைப்பில் பயன்படுத்திய பல வார்த்தைகள் பாக்யராஜ் நடித்த, இயக்கிய பல படங்களிலும் இடம் பெற்றுள்ளன. உதாரணம்:

மூன்று முடிச்சு — மூந்தானை முடிச்சு.
17 நாட்கள் அந்த 7 நாட்கள்.



நான்கு சுவர்கள் — சுவர் இல்லாத சித்திரங்கள்.
பாமா விஜயம் – பாமா ருக்மிணி,
அக்னி சாட்சி — பொய் சாட்சி.

இதே மாதிரி அவர் 'தண்ணீர் ... தண்ணீர்' என்றால் இவர் 'டார்லிங், டார்லிங்' என்றார். அவர் 'அபூர்வ ராகங்கள்' என்றால், இவர் 'மௌன கீதங்கள்' என்றார். அவர் 'ஏக் துஜே கேலியே' என்றால் இவரது கதை 'ஏக் சீ பூல்' என்கிற பெயரில் வெளிவந்தது!

—இரைஞானி

**வரி விளம்பரங்கள்**

பத்திரிகைகளில் வரும் வரி விளம்பரங்களிலும் சுவையான விஷயங்கள் உண்டு. சினிமா தயாரிக்கிறாராம் ஒருவர். வரி விளம்பரம் போட்டிருக்கிறார். நடிக, நடிகையருக்கு சைக்கிள் விடத் தெரிந்திருக்க வேண்டுமாம்! (நடிக்கத் தெரியா விட்டாலும் பரவாயில்லையா?)

ஒரு திருமண விளம்பரத்தில், கண்ணதாசன், எம். எஸ். இவர்களின் ரசிகர்களாக இருக்க வேண்டும்' என்று குறிப்பிடப்பட்டு இருக்கிறது!

—கடுகு.



**ஞாயிற்றுக்கிழமை காலைபதினொருமணிக்கு அடையாறிலுள்ள டி.ஏ. சேகர் வீட்டுக்கு லேனா தமிழ்வாணன் வந்தார்.**

''ஹலோ... லேனா... வெல்கம்...''

''ஹலோ... சேகர்..எப்படி இருக்கே?''

''ஃபைன்... ஆமாம்... என்ன கறுப்புக் கண்ணாடிய காணோம்?''

(சிரித்தபடியே) ''கறுப்பு கண்ணாடி விழாக்களுக்குப் போற போதும், போட்டோவுக்கும் மட்டும்தான். ''கண்ணாடியைக் கழட்டிட்டு, நான் எந்த பொது இடத்துக்கும் தாராளமாய்ப் போகலாம். எந்தப் பிரச்னை கோலாவாங்கிக் கொடுப்பீ யேடல் பாக்கெட் மணியில இருந்து.''

''நீ பாகிஸ்தானுக்கு டெஸ்ட் மாட்ச் ஆட செலக்ட ஆனதைக்கேள்விப் பட்டதும், உனக்கு என் வாழ்த்துக்களைச் சொல்லணும்னு நினைச்சேன். ஆனா நான் காண்டாக்ட் பண்ணினப்போ, நீ பாகிஸ்தானுக்குக் கிளம்பிட்டதாச் சொன்னாங்க.''

''அதை ஏன் கேக்கறேப்பா? டி. வி.ல மதன்லாலுக்கு அடி. அவருக்குப் பதிலா டி. ஏ. சேகர் பாகிஸ்தானுக்குப் போகிறார்ன்னு நியூஸ் சொன்னாங்க. ஆனா கிரிக்கெட் போர்டுல கேட்டா, அதிகாரபூர்வமா எங்களுக்குத் தகவல் வரலே.

''ஆரம்பமே சுவாரஸ்யம் தான்! ஏர்போர்ட்ல இருந்து என்னை அழைச்சுண்டு போக யாருமே வரலே. எனக்கோ ஹிந்தி பேச வராது. பேசினா புரிஞ்சுப்பேன். உருது சுத்தமாய்ப் புரியாது. என்ன பண்றதுன்னு தெரியாம முழிச்சிகிட்டு நின்னப்போ ஓர் இளைஞர், என் கிரிக்கெட் பாட்டிலிருந்த டி. ஏ. சேகர் என்ற பெயரைப் பார்த்து விட்டு (அப்போது பாகிஸ்தானியப் பத்திரிகைகளில் பெயரும், போட்டோவும் வந்திருந்தது.) என்கிட்டே வந்து விசாரிக்க, நான் விஷயத்தைச் சொல்ல, அவர் தம் காரிலேயே மற்ற ஆட்டக்காரர்கள் தங்கியிருந்த ஓட்டலுக்கு

# சாதனை: இன்னிங்ஸில் ௯ விக்கெட்
# வேதனை: கோட்டைவிட்ட ௩ காட்ச்

யும் இருக்காது. க. கண்ணாடி போட்டால் லேனா. கழட்டிட்டா லட்சுமணன்.. உன் கிரிக்கெட்டெல்லாம் எப்படி இருக்கு? எனக்கு எப்போதுமே கிரிக்கெட்ல இன்டரஸ்ட் உண்டு. நீயோ ஸ்கூல் நாளில இருந்தே நல்ல பிளேயர். நாம ஒருத்தரை ஒருத்தர் அடிக்கடி பாத்துப் பேசிக்காம இருந்தாலும் நான் உன்னுடைய வளர்ச்சியை ரொம்ப ஆர்வமா கவனிக்கிறேன். ராமகிருஷ்ணா ஸ்கூல்ல பதினொன்று 'பி' செக்ஷன்ல என் கூடப் படிச்ச நீ இன்னிக்கு டெஸ்ட் கிரிக்கெட் பிளேயரா இருக்கே! ஐ யம் ரியலி வெரி ஹாப்பி அபௌட் இட் சேகர்!''

''என்ன இருந்தாலும் அப்போ நீ கொடுத்த என்கரேஜ்மெண்ட்டை நான் மறக்க முடியுமா? எத்தனை போர், சிக்ஸர், அடிச்சாலும், விக்கெட் எடுத்தாலும் அத்தனை கோக்கோ வந்தாதானே அனுப்ப முடியும்னு சொன்னாங்க. ஒரு வழியா, தகவல் வந்து, நான் அவசர அவசரமா என்னைத் தயார் பண்ணிக்கொண்டு பாகிஸ்தானுக்குப் பறந்தேன்.''

''பாகிஸ்தான் அனுபவம் பற்றி ஏதாவது இன்டரஸ்டிங்காச் சொல்லேன்.

அழைத்துப் போனார்.''

''நான் மாட்சுகளை டி. வி.ல பார்த்தேன். ஆனாலும் அதுலே நீ மூணு காட்சுகளைத் தவற விட்டப்போ எனக்கு எவ்வளவு வருத்தமா இருந்தது தெரியுமா?''

''என்ன பண்றது? அந்தக் காட்சுகளைப்பிடிச்சிருந்தா அந்த மாட்சின் தலை எழுத்து மட்டுமில்லா



○ இந்த பந்தாலதான் 9 விக்கட் டுகளை விழுத்தினேன்

மல், என் தலை எழுத்தும் மாறி இருக்கும்.''

எதேச்சையாக வேணு, ஹாலிலிருந்த ஷோ கேஸ் பக்கம் திரும்ப, அது என்ன ஒரு கிரிக்கெட் பந்தை வைச்சிருக்கே அதுவும் பழைய பந்து போல இருக்கே.''

''ஆமாம். 60—ல ரஞ்சி டிராஃபி மேட்ச்ஆடினப்போ ஒரே இன்னிங்ஸ்ல நான் ஒன்பது விக்கெட்டை எடுத்தேன். அப்போ நான் வீசின பந்து தான் இது. அதனால தான் இன்னும் பத்திரமா பாதுகாக்கறேன். அது சரி. நீ பத்திரிகை ஆசிரியர் தான்! ஒத்துக்கறேன். அதுக்காக என்னையே கேள்வி மேல கேள்வியாக் கேட்கறியே நானும் சில கேள்விகள் கேக்கறேன். பதில் சொல்லேன்.''

''நான்தான் வாரா வாரம் பதில் சொல்றேனே. சரி, நீயும் கேளு! எனக்கு ஆட்சேபனை இல்லே.''

''நீ கல்கண்டுல தான் முதல்ல எழுத ஆரம்பிச்சயா?''

''ஆமாம் ஒரு ஆங்கிலப் பத்திரிகையில் வந்த ஒரு கட்டுரை ரொம்ப இண்டரஸ்டிங்கா இருந்தது. ''புலிக்கு ஆபரேஷன்'' என்று அதைத் தமிழில் எழுதி அப்பாவிடம் தந்தேன். அவர் ஒண்ணுமே சொல்லாமல் டேபிளில் வாங்கிப் போட்டுக்கொண்டார். சில வாரங்கள் கழித்து, அது கல்கண்டில் வெளியானது.''

''கல்கண்டுல வெளியிட அவ்வளவு விஷயங்களை எப்படி சேகரிக்கிறீங்க?''

''இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் வெளியாகிற அத்தனை ஆங்கிலப் பத்திரிகைகளையும் வாங்கறோம். எனக்கு உதவியா நாலு பேர் இருக்காங்க. எல்லாவற்றையும் படிச்சு, சுவையானவற்றைத் தமிழில தருகிறோம். அவ்வளவுதான்.''

''எழுதற போது இப்படி இருந்தாத்தான் 'மூடு' வரும் என்றெல்லாம்உனக்கு உண்டா?''

''ம்... ஆரம்ப நாளிலே வெள்ளைத் தாளில், அமைதியான சூழ்நிலையில தான் எழுதுவேன். ஆனா இப்ப என்னையே நான் மாத்திக்கிட்டேன். எந்தச் சூழ்நிலையானாலும் என்னால் நினைச்சதை எழுத முடியும். சொல்லப் போனா இந்தப் பக்கம் குழந்தை அழுதுக்கிட்டிருக்கும். நான் பாட்டுக்குப் பக்கத்துல உட்கார்ந்து எழுதிக்கிட்டே இருப்பேன்.''

''என்ன! உனக்குக் கல்யாணம் ஆயிடுச்சா? எத்தனை பசங்க?''

''ரெண்டு. உனக்கு?''

''இன்னும் கல்யாணம் ஆகலே.... அண்ணன் கல்யாணமானதும் தான் லேன் இனியர் ஆகும்.''

(சிரித்துக் கொண்டே) ''ஆங்; முக்கியமா ஒண்ணைக் கேக்க மறந்துட்டேனே! நீ ஏன் மத்த பௌலர்கள் போல நேரா ஓடிவந்து பந்து வீசாம, 'L' போல வளைஞ்சு ஓடி வந்து பந்து வீசறே?''

''நான் செம ஹைட்! (உயரம் 6 அடி 3 அங்குலம்) எனக்கு வளைஞ்சு ஓடிவந்து பௌல் பண்ணினா வசதியா இருக்கு. அப்போ என் பந்து எப்படி வரும்னு ஜட்ஜ் பண்ணறதும் பாட்ஸ்மேனுக்குக் கஷ்டம். அதான்.''

ஒரு மணிநேரம், அமர்க்களமாக, அரட்டைக்கச்சேரி நடந்தது. பிறகு, வேணு விடைபெற்றார்.

ஏற்பாடு, தொகுப்பு:
**எஸ் சந்திரமௌலி**

புகைப்படம்: **சேகர்**



ஒருவர்: ''வரவர நம்ம ஆறுமுகம் மளிகைக்கடையில் பொருள்களை வாங்கவே பயமாயிருக்கு!''

மற்றவர்: ''ஏன்?''

ஒருவர்: ''ஏற்கெனவே கொடுத்திருக்கிற கடனை எல்லாம் அடைக்கச் சொல்றான் பாவி!''

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.

பம்பாய் பாந்திரா பகுதியில் 50 வருடங்களுக்கும் மேலாக 'பாலி ஹில் ரோடு' என்று அழைக்கப்பட்டு வந்த ஒரு முக்கிய சாலைக்கு இப்பொழுது 'நர்கீஸ் தத் ரோடு' என்று பெயர் மாற்றம் செய்துள்ளார்கள். இந்தப் பெருமை இதுவரை வேறு எந்த நடிக, நடிகைக்கும் கொடுக்கப் படவில்லை.

—செம்பூர் சந்துரு.



# வேங்கை வனம்

## அத்தியாயம் 7

### உருவமும் நிழலும்

"முதுக்கலவல் வேளான் செல்வதைக் காட்டிலும் நான் செல்வது தான் சாலச் சிறந்தது."

சேனாபதி காளிங்கனுடைய எதிர்பாராத நுழைவு கண்டு, பலரும் பலவித கோணங்களில் பார்த்தனர்.

"மன்னர்பிரானே! அனுமதியின்றி நுழைந்தாலும் ஓர் அவசரத்தை முன்விட்டு நுழைந்தேன். அதற்கு உறவு உரிமையும் ஒரு காரணமாகும்."

ஒரு பக்கமாக ஒசிந்து நின்ற ஒன்டொடியாள் தியாகவல்லி, தனது அண்ணனின் அரசியல் நாடகத்தை உன்னிப்பாகக் கவனிக்கிறாள்.

"என்ன அவசரத்தை முன்னிட்டு வந்தாய் காளிங்கா?" என்றான் வேங்கை மார்பன்.

"மன்னர்பிரானே! நான் உங்கள் படைகளுக்கு வேறானவன்; மாமன் மகன் என்ற உறவுக்கு வேறானவனுமி விடக் கூடாதல்லவா? மது அருந்துவது நியாயமா? அப்படி ஒருநிலை வரக் காரணம் என்ன? இதனை அறிய அவசியமானதால் அவசரமாக உள்ளே நுழைகிற போது நடந்தது ஓரளவு உணர முடிந்தது, என்பதை விட வெகுக்க முடிந்தது. எனவேதான் மதுரை நோக்கி நானே சென்று ஆவன செய்யத் தீர்மானித்து இருக்கிறேன்."

அந்தப் புயலின் வருகையை வசந்த வருகையாக்கினாள் தியாகவல்லி: "அண்ணன் சொல்வது தான் சரியானது. வார்ப்படம் ஒழுங்காகச் சூழ்விட்டு நமக்கு வந்து சேர வேண்டுமல்லவா? ஏதேனும் இசகுபிசகாக நிகழுமானால் மன்னர் மனம் நோய் கண்டு மதுவை மீண்டும் மருந்தாகத் தேடி விடக் கூடாது."

"அப்படியென்றால் இனி மது அருந்துவதில்லை என்று சத்தியம் செய்துவிட்டாரா?"

காளிங்கனின் இந்தக் கேள்வியைக்கண்டு, வேங்கை மார்பன் விழிகளில் தியாகவல்லி விகசிக்கிறாள்.

தியாகவல்லியின் நாவு தந்தி வாத்தியமாய் ஒலித்தது: "சத்தியம் செய்தது போலத்தான். நான் தியாகவல்லியாயிற்றே! அதற்காக அவர் செய்த தியாகம்."

என்னதான் அவள் திடமாக இவ்வார்த்தைகளை உதிர்த்தாலும், அவற்றில் ஏமாற்ற ஒலி அலை மோதியதைக் கண்ட காளிங்கன், நிலைதடுமாறி ஏற்கெனவே நெஞ்சுள் மூண்டிருந்த கனலைக் கிளறிவிட்டுக் கொண்டான்.

"அந்த அளவுக்கு உனக்கு மதிப்பளித்ததற்காக மகிழ்கிறேன் தங்கையே!"

"இன்னொன்றுக்காகவும் நீங்கள் மகிழ வேண்டும் அண்ணா! அது நானும் உங்களுடன் மதுரைக்கு வருவது!"

தியாகவல்லி இவ்வாறு கூறி நிறுத்திய அந்த கணம்...

"நீயா?" — காளிங்கன்.

"நீ ஏன்?" — வேங்கை.

"நீ எதற்காக?" — அமைச்சர்.

தியாகவல்லியின் செவ்விதழ்களில் புன்னகை, ஒரு புதிய ராஜதந்திரத்தை மின்னச் செய்கிறது. அவள் சொன்னாள்.

"நமது மன்னரின் பெருமதிப்பை மேலும் பெறுவதற்காக!" என்று கூறியவள், ஒற்றனை நோக்கி, "நீ போகலாம்! பயணமாகிற போது உடன் கலந்து கொள்ளலாம். ஆனாலும் உதவ ஒப்புக்கொண்ட உனது விசுவாசத்துக்கு எனது சார்பில் நன்றி கூறுகிறேன்!" என்றாள்.

ஒற்றன் பசுபதியும் பணிந்து விடைபெற்றுச் சென்றான்.

அதுவரை அடங்கியிருந்த வேங்கையின் நாவு இப்போது அசைந்தது.

"காளிங்கன் செல்வதில் நியாயமிருக்கிறது! நீ செல்வதில் என்ன நியாயம் இருக்கிறது தியாகவல்லி!"

"சிலைக்கான வார்ப்படத்தை எடுத்து வருவதற்கு மாறாக அந்தச் சிலா ரூபிணியையே அழைத்து வர முயலலாம் அல்லவா?"

அண்ணன் காளிங்கன் போக்கை மிக நன்கு கூர்ந்து பரிசீலித்து, அரசியல் நாடகமாடும் தியாகவல்லியை யாரால் புரிந்து கொள்ள முடியும்?

"தியாகவல்லி! சற்று விளக்கமாகச் சொல்லித் தெளிவையுண்டுபண்ணித் தீர்மானத்துக்கு வரச் செய்யலாமே!" என்றார் குறுமலைக்கிழார்.

"அமைச்சர்பிரானே! அண்ணன் மாறுவேடத்தில் சென்று, தலைமறைவாக இருந்து

செயல்படுவதை விட. நான் ஓர் ஆலோசனையை முன்னிட்டே இவ்வாறு மாறுபட்டேன். நானும் அண்ணனும் ஏதோ ஒரு ராஜதந்திர அடிப்படையில் கீழ் மதுரை அரண்மனையுள்ளேயே நுழைந்து விடவேண்டும்.''

''நுழைந்து...?''

''வார்ப்படவேலையை அண்ணன் கவனிப்பதோடு, போர்ப்படை இரகசியங்களையும் அறியலாம். நானோ...''

''நீ?'' வேங்கை மார்பன் நாவு அவசரத்தில் துடிக்கிறது.

இயாகவல்லி நகைக்கிறாள்; ''நான் இளவரசி திருமேனியின் நெஞ்சை அசைத்துப் பார்ப்பேன்; இதயத்தை உலுக்கிப் பார்ப்பேன்; எனது கானப்பேர் காவலரின் காதலைக் கவிதையாக்கிச் சொல்லுவேன்; வேங்கையின் வீரத்தைப் பரணியாக்கிப் பாடுவேன்; அவரது மார்பில் துடித்துக் கொண்டிருக்கும் துடிப்புகளை ஓவியமாக்கி ஒப்படைப்பேன்! திருமேனியைத் திருத்துவேன்; இருப்திபடச் செய்வேன்; திருமணத்துக்குச் சம்மதிக்கச் செய்வேன்! இதுவே மன்னருக்கு இப்பிறவியில் நான் செய்யும் மரியாதைக்குரிய கடமை.''

அவளது நெஞ்சில் நீர் பிரவாகமெடுத்தாலும், நிதானத்தால் அதனைக் கண்களில் மடை திறவாது காத்துக் கொண்டாள்.

''நல்ல சிந்தனை!'' என்று பெரிதாகப் பாராட்டினார் குறுமலைக்கிழார்.

'ஓ...இயாகவல்லீ...'— உள்ளூற மகிழ்ந்து போனான் வேங்கைமார்பன்.

'தங்காய்! நீ எது குறித்தோ என்னோடு சதிராடுகிறாய்!'...— என்று குமுறிக்கொண்டான் காளிங்கன்.

''அரண்மனையுள் நுழைவது அவ்வளவு சாத்தியமா? சொந்தப் பெயரில் நுழைவது நல்லதா? இதற்கான திட்டம்?'' — என்றான் வேங்கைமார்பன்.

''அதனை என்னிடமே நம்பி விடக் கூடாதா?'' — என்றாள் இயாகவல்லி.

''உன்னை நம்பாவிட்டால் நான் வேறு யாரை நம்பப் போகிறேன் இயாகவல்லி! ஆனால், காளிங்கன் எதற்காக அரண்மனையுள் நுழைந்து ரகசியமறிய வேண்டும்?''

''ஒருகால் நாளை இசைதிருப்பம் கண்டு யுத்தம் மூளுமேயானால்?''

காளிங்கன் அதிர்ந்து போனான். அவனையே வேறுவிதமாகப் பிரதிபலிக்கச் செய்கிறாள் தங்கை.

வேங்கைமார்பனோ, ''நீ ஒரு ராஜதந்திரியாக இருக்க வேண்டியவள்!'' என்றான்.

காளிங்கன் சந்தர்ப்பம் நோக்கிக் குறுக்கிட்டான்:

''அதனால் தான் மாமன் மகளாகிய நீங்கள் இவளுக்கு ஒரு ராஜதந்திரியான மாப்பிள்ளையைத் தேடுகிறீர்கள் போலும்!''

சுருக்கென்று உறைத்தது வேங்கைமார்பனுக்கு. ''ஆமாம், காளிங்கா! என்னிலும் சிறந்த ராஜதந்திரியைத் தேடுகிறேன்.''

சமாளிக்கிறான் காளிங்கன். ''அப்படியானால் முதலாவதாக மகிழ்பவன் நான் தான்.''

''பின் வேறு யாராக இருக்க முடியும் அண்ணா!'' என்று அமைதிப்படுத்தினாள் இயாகவல்லி.

இனி இயாகவல்லி தன்னுடன் வருவதை எவ்விதத்திலும் தடுத்து நிறுத்த முடியாது என்று எரிச்சலுற்றான் காளிங்கன்.

நாளைய காலையில் புறப்பாடு என்று நிர்மானமானது.

ஆதியகவன் முதற்றே உலகு, என்று ஆதவன் பொன் சிறகை விரிக்கிற போது...

பயணம், வேங்கைமார்பன் வாழ்த்துடன் புறப்பட்டது.

ரதத்தில் காளிங்கன், இயாகவல்லி, ரதசாரதி பசுபதி. உடன் ஐந்தே வீரர்கள்— புரவிகள்!

இவள் ஏன் தன்னுடன் வரவேண்டும்? நெஞ்சு இன்னமும் கருவிக் கொண்டு கனலைக் கக்கியது. ஆனாலும் அப்போதைக்கு அவன் கேட்டுக் கொள்ளவில்லை. கேட்கக் கூடிய சந்தர்ப்பத்தை எதிர்நோக்கினான்.

இயாகவல்லியின் நினைவிலோ...

வேங்கைமார்பன் நீந்திக் கொண்டிருந்தான்.

உடன் வருகிற ஐந்து வீரர்களும் கைதேர்ந்த ஒற்றர்கள். அவர்கள் எக்காரணத்தை முன்னிட்டும் தனது சொல்லுக்கு மீறி இயங்கக் கூடாது. எதுவானாலும் தன்னைக் கலக்காது செயல்படக் கூடாது என்கிற ஆணித்தரமான கட்டளையை அவன் இரகசியமாகப் பெற்றிருந்தான்.

நேற்றிரவு...

—திருமேனியை வசப்படுத்த நீயே முன் வின்று செல்வது எனது நெஞ்சை ரணமாக்குகிறது இயாகவல்லி! திருமேனிக்குத் திருமேனிதான் சமைக்கிறேன்; உனக்குக் கோயில் எடுப்பேன்!

—அப்படியென்றால் நான் கோயிலுக்குரியவள்தானா? எனக்கும் ஆசாபாசங்கள் இல்லையா?

—உனது போக்கு இதனைத்தானே நிரூபிக்கிறது இயாகவல்லி! திருமேனியிடம் நீ என்னைப்பற்றி என்ன சொல்லப் போகிறாய்?

—சென்ற பிறகு சிந்திக்க வேண்டிய கற்பனஞ்சனி அது!

—உனது வருகையை நான் ஆவலோடு எதிர்பார்க்கிறேன்!

—அப்படியென்றால் திருமேனி வருகையை எதிர்பார்க்கவில்லையா?

—நீ வந்தாலே அவள் வந்த மாதிரி தானே என்று கூறினேன்.

தனிமையில் பேசிக் கொண்ட சொல் முத்துக்களில் சில சிதறல்கள்.

அவர்கள் மதுரை எல்லையை அடைகிற போது, இருளரக்கி தனது கரிய பெரிய கூந்தலை விரிக்கத் தொடங்கி விட்டாள். நிலவைத் தேய்த்து விட்ட திமிர்த் தாண்டவமாடினாள்.

மதுரை எல்லையிலிருந்த அதே வழிப் போக்கர் சத்திரத்தில் இரவைக் கழிக்கத் தங்கினர்.

உணவு பொருட்டு பசுபதியைப் அனுப்பி வைத்தனர்.

# இணைந்த உழைப்பு...
# சிறந்த பிணைப்பு!



பற்களை சுத்தம்
செய்வதற்கு
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுப்பதற்கு
மென்மையான
வெள்ளைக் குச்சங்கள்

போர்ஹென்ஸ்
டபிள்-ஆக்ஷன்
டூத்ப்ரஷ் போல.
உங்கள் பற்களை
சுத்தம் செய்யும்போதே
ஈறுகளையும் தேய்த்துக்
கொடுக்கிறது.

**போர்ஹென்ஸ்**
டூ-இன்-ஒன் டூத்ப்ரஷ்

ஆங்குலர் டீலக்ஸ்,
அடல்ட் மற்றும் ஜூனியர்
சைஸ்களில் கிடைக்
கின்றன.

324F 172 TM

# *In Trust For The People...*

The entire wealth gathered by the Founder of Tata Enterprises, and his sons and successors, over almost a century of industrial pioneering is bequeathed to Tata philanthropic trusts and foundations.

The whole of that wealth is held in trust for the people and used exclusively for their benefit—scholarships for education, grants for rural welfare, contributions for medical research, support for national institutions, and donations for relief from natural disasters.

The circle is thus complete: what came from the people goes back to the people many times over.



**TATA ENTERPRISES**

காளிங்கனோ அந்தக் கிராமத்தைக் கவனிக்கச் சென்றான்.

தனவந்தர்கள் பொருட்டு ஒதுக்கிவைத்திருந்த அந்த அழகிய தனியறையில் தியாகவல்லி, தனித்து அமர்ந்து பாண்டிய அரண்மனையுள் எவ்வாறு நுழைவது என்பது குறித்து ஆலோசித்துக் கொண்டிருந்தாள்.

ஒற்றை விளக்கு பெரிதாக ஒளிபரப்பிக் கொண்டிருந்தது.

வெளியில் சென்ற காளிங்கன் சத்திரத்தை அடைந்து, வெளிப்புறமாக நின்று கரிய வானத்தை அண்ணாந்து நோக்குகிறான்.

அவனது சிந்தனைக்குரிய தருமநியாயங்களைக் குறை சொல்ல முடியாது என்பது போல நட்சத்திரங்கள் சிரிக்கின்றன.

தங்கையை அரியணையில் அமர்த்தி அழகு பார்க்க ஆசைப்பட்டான்.

அது முடியவில்லை.

ஏன் பழிவாங்கி நாமே அமர முயலக் கூடாது?

கேள்விக்குறி இன்னும் பல படிகள் நீண்டு சிந்திக்கிறது.

திருமேனியையே அரசியாக்க முயன்று, அவளுடனேயே கானப்பேர் அரியணையில் அமர்ந்து, வேங்கைமார்பனை வீழ்த்தினால்...?

'ஆசைக்கும் ஓர் அளவு உண்டடா காளிங்கா' என்று மேலும் சிரிக்கின்றன நட்சத்திரங்கள்.

சத்திரத்துள் நுழைந்து அறையினுள் பிரவேசிக்கிறான் காளிங்கன். தங்கையைக் கிழக்கு மேற்காகக் கிழிக்கவேண்டும்.

ஆத்திரம் பொங்க அறைவாசலில் நின்று கவனிக்கிறான்.

அமர்ந்திருந்த தியாகவல்லி மெல்லக் கண் மலர்த்திக் கவனிக்கிறாள்.

''என்ன அண்ணா! அங்கேயே நின்று யோசிக்கிறீர்கள்! உள்ளே வாருங்கள்.''

அவன் உள்ளே வந்தும் ஆத்திரமாகக் கவனிக்கிறான். கண்களில் ஜுவாலை....

''ஆத்திரப்பட வேண்டாம். உங்களுக்குத் துணை புரியத்தான் உங்களுடன் வந்து தொலைந்தேன். இது புரியவில்லையா?''

புரியவில்லை என்பது போலத் தலையசைக்கிறான் காளிங்கன்.

விளக்கொளியில் பூதாகாரமாக நீண்ட அவனது நிழல் பயங்கரமாக அசைகிறது.

''அண்ணா! சில சமயங்களில் உருவத்தை விட நிழல் பெரிதாக இருக்கும், தெரியுமா? தெரியாவிட்டால் உங்கள் நிழலைப்பாருங்கள்! இதுபோல உங்கள் சிந்தனையை விட எனது சிந்தனை பெரிதாக இருக்கலாம் அல்லவா?''

காளிங்கன் கண்களில் விழிப்புநிலை தடம் புரண்டு கவனிக்கிறது.

''இப்படிப் பாண்டிய அரண்மனையுள் நுழைந்து விழிக்கக் கூடாது என்றுதான் நானும் பின் தொடர்ந்தேன். எனது எழில், கானப்பேரெயில் அரியணையை அலங்கரிக்கப் போவதில்லை. அது திருமேனி கனவு காண்கிறது. அந்தக் கனவைக் கலைக்க நீங்கள் ஆவேசப்பட்டுச் சதி நடத்த சூழ்ந்து விட்டீர்கள். ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்தது; புறப்பட்டும் விட்டீர்கள். இந்த உங்கள் கனவை நனவாக்க நான் ஏன் முயலக் கூடாது? நான் அங்கிருந்து என்ன செய்யப் போகிறேன்? ஏக்கத்தால் தற்கொலை செய்து கொள்ள நேரிடலாம்! அதைவிட உங்களுடன் வந்து உங்களுக்கு உடந்தையாக இருந்து, இயலுகிற போது திருமேனியின் இதயத்தில் உங்களைக் குந்த வைக்க முயலலாம் அல்லவா? எனக்குச் சேர வேண்டிய இதயத்தைப் பறித்துத் திருமேனியிடம் கொடுக்க நான் என்ன பைத்தியக்காரியா?''



ஒருவர்: ''எதுக்கு பையனைப் போட்டு இப்படி அடிக்கறீங்க?''

மற்றவர்: ''ஒரு சினிமா கூட விடாம எல்லாத்தையும் பாருடான்னு நான் சொன்னதைக் கேட்காம, இப்போ ஃபெயில் ஆயிடுத்துன்னு வந்து நிக்கறான் சார் ராஸ்கல்!''

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.

---

காளிங்கன் ஒருகணம் கற்சிலையாகி, மறுகணம் உயிர்ச்சிலையானான்.

''அப்படியானால் சிற்பி ஏன்? வார்ப்படச் சிலை ஏன்?'' என்றான் காளிங்கன்.

''நம்மை நம்புவதற்கு இது ஓர் ஆயுதம்! ஒருகால் நீங்கள் மதுரையிலேயே தங்க நேர்ந்தால், நான் போய் கூறும் சமாதானத்தில் நம்பிக்கை ஏற்பட வேண்டுமல்லவா? மேலும் இந்தச் சிலைக்கு ஒரு முகூர்த்த நாள் குறிப்பிட்டு, பலருக்கும் பகிரங்கமாக அறிவித்து, மாலையிட்டு, பாண்டிய மாமன்னரை அவமதிக்கச் சொல்லி அபிப்பிராயம் வழங்கி இருக்கிறேன். அவரும் ஏற்றுக் கொண்டார். இதன் மறுவிளைவு? யுத்தம்! புரிகிறதா அண்ணா?''

நிஜமாகவே இவள் ஒரு மகாராஜதந்திரியே என்று வேங்கைமார்பன் வியந்தது போல, காளிங்கனும் மலைத்துப்போனான்.

''அதுசரி! அரண்மனையுள் எப்படி நுழைவது?''

''பொழுது புலரட்டும்; எனது சிந்தனையும் கூடவே புலரும்!''

தியாகவல்லி, தன்னையே ஒருகணம் எண்ணிப் பார்த்து, – தரும நியாயங்கள் எவ்வாறு தராசுத் தட்டில் அமரப்போகின்றன என்று நினைத்துப் பார்த்துத் தன்னுள் மெல்லியதாக முதலில் சிரித்துக் கொண்டு, இப்போது கனமாகக் கலகலவென்று சிரிக்கத் தொடங்கினாள்.

(தொடரும்)

# படிக்களாய்ச் சில நாட்கள்

நா. நாகராஜன்

**கா**லை ஒடித்து வீட்டில் உட்கார வைத்ததைப் போலிருந்தது அவனுக்கு. ஒரே இடத்தில் இருக்க முடியாமல் உறுத்திக் கொண்டிருந்தது ஒரு சங்கடம். எவ்வளவு நேரம்தான் வீட்டு சுவர்களையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்க முடியும். வெளியில் கூட தலைகாட்ட முடியவில்லை. பார்க்கிற ஒவ்வொரு நபரும் கொஞ்சம் இளக்காரமாகப் பார்க்கிறதைப் போல, நெஞ்சு நிறைய வஞ்சனையுடன் இவனது 'இன்றைய நிலைக்கு' சந்தோஷப்படுகிறவர்கள் போல நடந்து கொள்கிற மாதிரி படுகிறது இவனுக்கு!

நேற்றுவரை சிரித்துப் பேசி சந்தோஷமாக வளைய வந்து — எல்லோரையும் உண்மையுடன் நேசித்தது பழகியது — உதவியது எல்லாமே பொய் என்பதை இந்த நாட்கள் எச்சரித்துக் கொண்டிருக்கின்றன.

அப்பாவிடம் போய் சொல்ல முடியவில்லை. பாவம் படுக்கையிலிருக்கிறார். கவலையினாலேயே பாதி தேய்ந்த, மெலிந்த தேகத்தில் கண்களில் உயிரைத் தேக்கிக் கொண்டு கிடக்கிறார். பேச்சு கூட மிக மிக மெதுவாகத்தான் வருகிறது. உதடுகள் அசைகிற வேகத்துக்கும் கண்களின் அழுத்தமான பார்வைக்கும் பேச்சால் ஈடுகொடுக்க முடியவில்லை.

''ஸ்ட்ரைக் என்னாச்சு....''

பக்கத்திலே போய் உட்கார்ந்து காதுப் பக்கம் குனிந்து, ''இன்னும் முடியலே பேச்சு வார்த்தைகள் நடக்கறது. சீக்கிரம் முடிஞ்சுடும்'' — என்று சொல்லும் போது தனக்கே நம்பிக்கை இல்லாதது குரலில் தெரிந்தது.

அப்பாவுக்கு அதை ஜீரணிப்பது கஷ்டமாக இருந்தது. கண்கள் கொஞ்ச நேரம் அவனையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருக்கும். அந்தப் பார்வை அவனை வருடிக் கொடுக்கும். அப்பா...!

அம்மாவிற்கும் சரி, எஸ். எஸ். எல். சி. முடித்து வீட்டிலிருக்கும் அக்காவிற்கும் சரி, ஸ்ட்ரைக்கைப் பற்றி சரியான விவரம் தெரியாது.

தினம்தினம் காலையில் சாப்பிடும் பொழுது அல்லது இரவு படித்துக் கொண்டிருக்கும் பொழுது கேட்பார்கள். 'ஸ்ட்ரைக் என்னாயிற்று' என்று.

''ஏண்ணே! ஹார்பர் ஸ்ட்ரைக் நடக்கும் போது கப்பல்ல தாராளமா ஏறிப் பார்க்கலாம் இல்லியா...''

''முடியாது உமா! உள்ளேயே நுழைய முடியாது. நிறைய பேருக்கு இது வாழ்க்கைப் பிரச்னை. உயிரைக் கொடுத்து அவங்க போராடற போது யாரும் உள்ளே போயி வேடிக்கை பார்க்க முடியாது...''

அவனுக்கு சட்டென்று தன் கேள்வியின் தப்பு புரியும்.

அம்மாவும் கூட சில சமயங்களில், ''ஆமாம் வேலை இல்லாத நாளுக்கு சம்பளம் கிடையாதா? என்ன ஆனாலும் நீங்க தானே எல்லா வேலையையும் ஸ்ட்ரைக் முடிஞ்சதும் செய்யணும்'' என்று கேட்பாள்.

''உனக்குப் புரியற நியாயங்கள் எல்லாம் எல்லாருக்கும் புரியணும்னு நீ எதிர்பார்க்கக் கூடாது'' என்றதும் கொஞ்ச நேரம் அவனையே பார்ப்பாள்.

அப்பா இந்த வேலை இவனுக்கு கிடைக்கத் தான் எவ்வளவு சிரமப்பட்டார்.

ஒரு பத்திர எழுத்தாளராக இருந்து, இருபதுக்கும் ஐம்பதுக்கும் ராப்பகலாக அலைந்து கொண்டிருக்கும் பிழைப்பு தன் மகனுக்கும் தொடர்ந்து விடக் கூடாது என்பதில் எவ்வளவு கவனமாக இருந்தார்!

இன்று—

''உனக்கு வர்ற எண்ணூறு ரூபாய் சம்பளமே காண மாட்டேங்குதே! இதிலயா மிச்சம் வைச்சு நகை வாங்கி உமா கல்யாணத்தை நடத்தப் போறோம். அவனவன் கஷ்டம் தெரியாம வாய் வலிக்காம இருபதாயிரம், முப்பதாயிரம்னு கேட்கறப்போ பக்கத்திலே போகக் கூட நமக்கு பயமா இருக்கு...''

இவனால் பதில் சொல்ல முடியாது.

''முருகேசா உனக்கு ரெண்டு சட்டை நல்லதா எடுத்துக்கோ! வெள்ளையா ரெண்டு பேண்ட் பளிச்சுன்னு எடுத்துக்கோ....'' அப்பா பார்த்துப் பார்த்துச் சொல்லுவார். ஆனால் அவன்தான் ஒவ்வொரு மாதமும் அந்த ஆசைகளைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறான்.

ஹாஸ்பிடலுக்குப் போய் பரிசோதித்தால் டெஸ்ட், ட்ரீட்மெண்ட் என்று ஏராளமாக செலவாகி விடுமோ என்ற பயத்திலேயே அவர் மௌனமாயிருந்தார்.

முருகேசன் எவ்வளவோ வற்புறுத்தியும் அவர் அசைவதாய் இல்லை.

'மனத்தெம்பு இருந்தால் போதும், கைமருந்தாலேயே எதையும் குணப்படுத்தி விடலாம்' என்பார்.

இருந்தாலும் சில சமயங்களில் அவரைப் பார்க்கும் பொழுது மனத்தின் அடியில் பயம் புரளும். அவர் நினைப்பதைப் போல் பெரிய மருத்துவ செலவு என்றால் அவனால் ஒன்றும் செய்ய இயலாது.

மாதாமாதம் துண்டு விழாமல் சமாளிப்பதே கஷ்டம் என்றால் அந்த ஆசைக்கும் இந்த ஒரு வார ஸ்ட்ரைக்கினால் மண்.

காலையில் எழுந்ததும் காபியை முடித்து விட்டு கடைசி வீட்டு பேங்க் மேனேஜரின் தயவில் ஹிண்டு பேப்பர் வாங்கிப் படிக்கும் பொழுதில் கூட, ''இன்றோடு ஸ்ட்ரைக் முடிந்து விடக் கூடாதா?'' என்று மனம் அடித்துக் கொள்ளும்.

பேங்க் மேனேஜர் பேச ஆரம்பித்து விடுவார்.

''என்ன முருகேசா! எப்போ முடியுமாம்....'' என்று கேட்டபடியே லுங்கியை மடித்துக் கட்டியவாறு பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொள்வார்.

''தெரியலே...'' சொல்லும்பொழுது தொண்டையில் துக்கம் உருளும்.

''எங்க விடப் போறாங்க. எனக்கென்னவோ ஒரு மாசம் ஆகும்னுதான் தோணுது. மந்திரியும் விட்டுக் கொடுக்கிறமாதிரிஇல்லே. இவங்களும் ஒத்துக் கொள்கிற மாதிரி தெரியலே. ரெண்டுல ஒண்ணு பார்த்தாத்தான் ஆச்சன்னு 'விருப்பா' இருக்காங்க. —ஆமாம் நீ லீவுல எதேனும் ஊட்டி, கொடைக்கானல்னு ஒரு ட்ரிப் அடிச்சுட வேண்டியதுதானே சும்மா ஜாலியா....''

—என்ன சொல்கிறார்! இது எப்படி சாத்தியம். அவனவன் சம்பளம் போகிறதே என்று வயிற்றெரிச்சலுடன் இருக்கும்போது ஊட்டியையும், கொடைக்கானலையும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாதே! இது வேண்டு



மென்றே ஆழம் பார்க்க விடுகின்ற வார்த்தை! வறுமையை துகிலுரித்துப் பார்க்க நினைக்கிற வக்ரத்தனம்!

அதற்குப் பிறகு பேப்பரில் படிப்பதற்கு எதுவும் இருக்காது!

மற்றவர்களைப் போல மதியம் படம் பார்த்துப் பொழுதைக் கழிக்கக்கூட மனம் ஒப்பாது. என்ன படங்கள், திரும்பத் திரும்ப ஒரே கதை! அரைத்த மாவு! ஆபாச வசனங்கள்! இரட்டை அர்த்தப்பாடல்கள்! என்ன இருக்கிறது புதிதாக!

எதை எதையோ நினைத்துக் கொண்டே நடந்தவனின் கால்கள் 'சப்ரிஜிஸ்ட்ரார்' ஆபீஸை நோக்கி நடந்தன.

அங்கே அவன் காலேஜ்மேட் காப்பிரைட்டராக இருக்கிறான். அவனிடம் பேசிவிட்டு வந்தால் இப்போதைய நிலைமைக்கு கொஞ்சம் இதமாக இருக்கும்!

ஆபீஸின் காம்பவுண்ட் சுவர் அருகே கொத்து கொத்தாக மனிதர்கள். நிறையப் பேர், வேஷ்டி சட்டையில், மடியில் பணத்துடன், பச்சை நிற பத்திரத்துடன் கிராமத்து மனிதர்கள். வாதித்துக் கொண்டு... இளைப்பாறிக் கொண்டு....

உள்ளே நுழைந்ததும் கண்ணில் பட்டது அந்தப் பெண்தான். அவளை அவன் தினமும் ஆபீஸ் போகும் போது பார்ப்பான். அவளின் அழகையும், ஆடை அணியும் நேர்த்தியையும் நினைத்து நினைத்து சந்தோஷப்பட்டிருக்கிறான். தினம் தினம் சந்திப்பதால் அவள் அவனைப் பார்க்கும் பொழுதுகொஞ்சம் இதழ் விரித்துப் புன்னகை பூக்கிற மாதிரி கூட படும். மற்றபடி பேசிப் பழக்கமில்லை! அவளா இங்கே!

ஃப்ரண்டைக் காணவில்லை. அவளிடம் விசாரிக்க மனம் தயங்கியது. என்ன நினைத்து கொள்வாளோ என்று! சந்தர்ப்பம்கிடைத்ததும் வேண்டுமென்றே பேசவருகிறான் என்று தப்பர்த்தம் பண்ணிவிடக் கூடாதே என்றும் பயமாக இருந்தது!

''ஹலோ... எக்ஸ்க்யூஸ் மி இங்கே ராமநாதன்னு ஒரு காப்பி ரைட்டர்....''

அவள் ஒரு நிமிஷம் நிமிர்ந்து முருகேசனை பார்த்தாள். வேலை ஏதும் இல்லை போலும் அப்போது அவளுக்கு.

''அவரு காபி சாப்பிடப் போயிருக்கிறார். இப்போ வந்திடுவார். உங்க ஆபீஸ் லீவா..''

''ஆஹா என்ன அழகாக ஆரம்பிக்கிறாள் என்று சந்தோஷமாய் இருந்தது. எவ்வளவு சரியாக என்னைத் தினம் அந்த நேரத்தில் எதிர்ப்படுவதை வைத்து 'ஆபிஸ் கோயிங் பெர்ஸன்' என்று கணக்குப் போட்டிருக்கிறாள்.

''நாங்கள் 'ஸ்ட்ரைக்' பண்ணிக் கொண்டிருக்கிறோம். ஒரு வாரமாகி விட்டது இன்றோடு! பேப்பரில் பார்த்திருப்பீர்களே...''

''ஓ...''

கொஞ்ச நேரத்திற்கு இரண்டு பேரும் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. அவள்முகத்தில் கவலையின் ரேகைகள் படர்ந்தன.

இது என்ன ஆச்சர்யம்! முன்பின் தெரியாத ஒருத்தனின் தற்காலிக வேலை நிறுத்தத்திற்கு வருத்தப்படும் சுபாவம்....

''எப்போ முடியுமாம்...''

கையை விரித்தான் முருகேசன்.

அந்த நேரத்தில் ராமநாதனின் வருகை ரொம்ப உதவிகரமாக இருந்தது.

''டே என்னடா... எப்போ வந்தே...''

அவள் அவனைப் பார்த்து இயல்பாகப் புன்னகைத்தாள்.

''ஜஸ்ட்... இப்பத்தான்...''

''என்ன திரும்ப வேலைக்குப் போறதா இல்லையா? என்ன போராட்டங்க! ஆளுக்கு ஒரு கப்பல் வேணுமா!''

முருகேசனுக்கு சிரிப்பு வந்தது. அவளின் முகத்தில் புன்னகையின் சாயல்கள்.

ஒருத்தர் நிலைமையை ஒருத்தர் புரிந்து போகிற போதுதான் கிண்டலும், கேலியும் கூட சந்தோஷம் தருகிறதே! இன்பவலிகள்.

ஆபீஸ் வாசலில் ஒரு கார் வந்து நின்றது. இரண்டு பேர் இறங்கி ராமநாதனை நோக்கி வந்தனர்.

எழுந்து நின்று ஐந்து நிமிஷம் பேசி முடித்தவன் முருகேசனைப் பார்த்து –

''கொஞ்சம் வெளியில போவோமா?'' என்றான்.

முருகேசன் எழுந்து,

''வரேன்'' என்று அவளிடம் விடை பெற்றுத் தெருவில் இறங்கி நடந்த பொழுது,

''என்னடா! வந்த அன்னிக்கே சிநேகிதம் பிடிச்சுட்டே! இனிமே உன்னை அடிக்கடி பார்க்கலாம்னு சொல்லு'' – சீண்டினான்.

---

பட்டினத்தார் ஒருநாள் ஒரு வயல் வரப்பில் தலைவைத்துப் படுத்திருந்தார். அந்த வழியே போய்க்கொண்டிருந்த இரண்டு பேரில் ஒருவர், ''எவ்வளவு பெரிய துறவி! வெற்றுத் தரையில் படுத்துக் கொண்டிருக்கிறார் பார்த்தாயா?'' என்றார். இன்னொருவரோ, ''படுத்துறங்க, தலைக்கு வரப்பு வேண்டியிருக்கிறதே. இந்தச் சுகத்தைத் துறக்கவில்லையே!'' என்றார்.

இதைக் கேட்ட பட்டினத்தார் வரப்பிலிருந்து தலையை எடுத்து, வயலிலேயே சாய்த்தார்.



உடனே இரண்டாமவர் சொன்னார்: ''பார்த்தாயா? இப்போது கூட அடுத்தவர் என்ன பேசுகிறார் என்பதைக் காது கொடுத்துக் கேட்கிற வழக்கம் போகவில்லையே!''

—வாரியார் பேச்சிலிருந்து, சௌம்யா.

---

''சேச்சே! அவளைத் தினம் தினம் ஆபீஸ் போகும் போது பார்ப்பேன். அதுவும் நீ இல்லேங்கறதுனாலதான் விசாரித்தேன். ஆமாம் அவ பேர் என்ன...?''

''எதுக்கு லெட்டர் எழுதப் போறியா? பையா இதோ பார். பொண்ணு ரொம்ப கஷ்டப்பட்டவள். அவ சம்பாத்தியத்த நம்பி வீட்டில ஆறு பேர் இருக்காங்க. நல்ல பொண்ணு. கொஞ்ச வருஷம் கழிச்சு அவ தம்பி தலையெடுத்த பிறகுதான் கல்யாணம் பண்ணிப்பா! அதுவரைக்கும் அவளுக்காகக் காத்திருந்து பைசா செலவில்லாமல் கல்யாணம் பண்ணிக்கறதா இருந்தா சொல்லு... நானே அவளைக் காதலிக்கச் சொல்றேன்...''

முருகேசனுக்கு ஒரு நிமிஷம் அந்தப் பெண்ணின் முகம் நினைவில் வந்துபோனது.

''எவ்வளவு அழகான முகம்! புத்திசாலித்தனமான கண்கள்! எல்லாம் இருந்து என்ன ப்ரயோஜனம்! பணம் மட்டும் இல்லாததற்காக எத்தனை ஆசைகளைத் தியாகம் செய்துவிட்டு யாரை வேண்டுமானாலும் ஏற்கத் துணிந்து... ஆனென்றால் அந்த ஒரு சுதந்திரம்... ஒரு தீர்மானிக்கும் அத்தாட்சி! இவளே நமக்குக் கிடைத்தால் கூட எவ்வளவு திருப்திகரமாக இருக்கும் வாழ்க்கை...''

''என்னப்பா கனவா! ஒரு பொண்ணு பேசிடக் கூடாதே! வாய் திறந்து! காதல்னு ஆரம்பிச்சு கல்யாணம் வரைக்கும் போயிடுவீங்களே!...''

சிரித்தான்.

பிறகு பேச்சு சினிமாவிற்குத் திரும்பியது. கொஞ்சம் அரசியல், (பாக்கியராஜ், ஜெயலலிதா பற்றி), கொஞ்சம் அன்-எம்ப்ளாய்மெண்ட் (செல்ப் – எம்ப்ளாய்மெண்ட் பாரபட்சங்கள் பற்றி) பேசி முடித்த போது மணி மூன்றரை.

ராமநாதனிடம் விடைபெறும்போது மனத்தில் சந்தோஷம் இருந்தது.

''வரேன்...''

''இரு'' என்று சொல்லிவிட்டு ஹேண்ட் பேக்கைத் திறந்து ஒரு ஐம்பது ரூபாய் நோட்டை எடுத்து முருகேசனின் கையில் திணித்தான்.

''இதை வைச்சுக்கோ...''

''ஏய் என்ன இது! உங்கிட்ட யாரு பணம் கேட்டா!'' முருகேசனின் பதற்றத்தை ஒரு சிரிப்பால் அழித்தான்.

''ரொம்ப சீயாக்ட் பண்ணாதே மச்சி! நேத்து நீ இல்லாதப்போ வீட்டுக்கு வந்திருந்தேன். உங்க ஃபாதரைப் பார்த்தேன். ரொம்ப வீக்கா இருக்கார். இதோ பாரு. நானும் இதை உதவியாத்தான் செய்யறேன். இன்னிக்கு நல்ல வருமானம். அதுல 50 ரூபாய் கொடுத்தேன். இல்லாட்டா காபி மட்டும் தான் முடிஞ்சிருக்கும். வீட்டுக்குப் போ! ஸ்ட்ரைக் வாபஸாயி சம்பளம் வந்ததும் வட்டியும் முதலுமா வாங்கிக்கறேன்...'' — அவன் போய்விட்டான்.

முருகேசனுக்குக் கொஞ்ச நேரம் ஒன்றும் புரியவில்லை. தரையிலிருந்து கிடைத்தபணம் மாதிரி இதற்கு என்ன செலவு என்ன அவசியம் என்று ஒன்றும் பிடிபடவில்லை. எவ்வளவு சாமர்த்தியமாக உதவி செய்கிறான். கொடுப்பதைக் கூட எவ்வளவு உரிமையுடன் அதட்டி கட்டாயமாகத் திணித்துவிட்டுச் செல்கிறான் என்பதை நினைக்கும்பொழுது சந்தோஷம் மனத்தை அழுத்தியது.

சட்டைப் பையில் பணத்தைத் திணித்துக் கொண்டு வீட்டை நோக்கி நடக்கும் பொழுது அந்தப் பணத்துடன் நிறைய நம்பிக்கைகளையும் தன்னுள் திணித்துக் கொண்டது போலிருந்தது முருகேசனுக்கு!

நடந்தான்.

ஜிம் க்ரீம் க்ரைம் 9

கதை : ஜேஎஸ்ராகவன்
சித்திரம் : செல்லம்

வருமான வரி அதிகாரி கிரிதேவன் இன்ஸ்பெக்டர் மோகனுடன் சப்பாத்தியை மென்று தாடைக்கு பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார்.

அப்பா, நேத்திக்கு நம்ம டாமியை எடுத்துண்டு வெட்ரினரி டாக்டர்கிட்ட போனேன். அவர் "என்ன இன்ஸ்பெக்டர் கையிலே விலங்கோட வரேங்களேன்னு ஜோக்கடிக்கிறார்

இதைக்கேளு. நீயும் மாதவியும் ரெட்டையில்லேயா. பிரசவம் பாத்த டாக்டர், "சார், உங்களுக்குப் பையன் பொறந்திருக்கான்"னு சொல்லிட்டு கூடவே, "சார்சாரதா ஒரு பொண்ணு"ன்னு சொன்னாங்க!













மாதவி மேலும் சில சப்பாத்திகளோடு வந்தாள்.
சதீஷ்! உனக்கு மோகனைத் தெரியுமா?
ஹாஹாஹா! தெரியும். அது சரி! உனக்கு பிஸ்டலானந்தாவைத் தெரியுமா?


உன் முடியைக் கருப்பாக்கியவர் தானே! தெரியும்.
அட! அப்போ உன் தலைதான் வெள்ளையாயிருந்ததா?
ஆமா சார்! ஐ மீன் ஆமாம் மாமா


சார்னு கூப்பிடு! மாதவி, நீ வேற மாப்பிள்ளையைத் தேடு
அப்பா!!


இதோ பாரு! எனக்கு கறுப்புன்னு அலர்ஜி. வியசாகியும் என் முடி கம்பீரமா வெளுப்பாகலேன்னு கடும் கோபம். வருமான வரி ஆனாலும் எனக்கு எல்லாமே 'வெள்ளையா' இருக்கணும். 'கருப்பா' இருக்கக் கூடாது!


கவலையை விடுங்க சார்! ஐ மீன் மாமா. போலீஸ் கிட்டேந்து மறையத்தான் 'டை' அடிச்சிண்டேன். சில நாளில போயிடும்.
சபாஷ்! அப்போ 'வரடை'யிலே சே! 'தை'யிலே முகூர்த்தம்.


மோகன்! மிஸ்டலானந்தாவை பார்க்கப் போலாமா?
நீலகண்டனைப் பார்க்கப் போனா முன்னே! இப்போ மிஸ்டலானந்தா?
ரெண்டு பேரும் ஒண்ணுதான் மாதவி!
தொடரும்


"அப்பவே சொன்னேன் மடையன் கிட்டே அவகிட்டே வைக்காதே பழி வாங்கிடுவான்னு இன்னிக்கு ராகமாலிகா சேலைக்கு பதிலா வேற ஏதோ சேலையை போட்டுட்டா இனிமே ரோமியோ எழும்பு என்ன வேண்டியது யதுதான்"

## வாசகர் பங்கு

# சமையலறைச் சிரிப்பு

### எம். ஜே. ஜீவன்லால், கோவை-16

எங்கள் வீட்டுக்கு விருந்தினர் வந்த போது எங்கள் தாயார் சீடைக்கு மாவைச் சிறு சிறு உருண்டைகளாகச் செய்து வைத்திருந்தார். வந்தவர் "யாரைச் சுடுவதற்காகத் துப்பாக்கி ரவைகள் வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்க, அனைவரும் சிரித்தோம்.

உருண்டைகளை வாணலியில் கொதிக்கும் எண்ணெயில் போட, மாவு ஈரம் உலராததால் வெடிக்க ஆரம்பித்தது. உடனே விருந்தாளி, "அடாடா, பீரங்கிக் குண்டுகளைப் போய்த் துப்பாக்கி ரவைகள் என்று தப்பாகச் சொல்லி விட்டேனே" எனவும்



முன்னைவிடப் பலமாகச் சிரிப்பொலி எழுந்தது!

### சியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்

வெய்யிலின் உக்கிரம். உடம்பில் வியர்வை ஆறாகப் பொழிய எரிச்சலுடன் சமைத்துக் கொண்டிருந்தேன். அருகில் வந்த கணவரிடம் அலுப்புடன் "கொஞ்சம் ஹெல்ப் பண்ணக் கூடாதா?" என்றேன்.

அவர் சிரித்துக் கொண்டே "இரண்டு வருஷமா உன் சமையலைச் சிரமப்பட்டுச் சாப்





பிட்டுக் கொண்டிருக்கிறேனே அதுவேபெரிய உதவிதான்" என்றார்.

களைப்பை மறந்து நானும் சிரித்தேன்.

### கோ. ராஜேஸ்வரி, சேலம்

தேங்காயை எப்போது சமையலுக்கு உடைத்தாலும் இளநீரைக் குடிக்க மகள் சாந்தி ஓடி வருவாள். ஒருநாள் நீர் இல்லை. "தேங்காய் முற்றி விட்டது; இளநீர் இல்லை" என்றேன்.

உடனே மகள் சாந்தி, "அம்மா இனிமேல் தேங்காய் வாங்காதே; பழமாய்ப் பார்த்து வாங்கு. அப்பத்தான் எனக்கு



நிறைய ஜூஸ் கிடைக்கும்" என்றாளே பார்க்கலாம்!

சிரிப்பில் வீடே அதிர்ந்தது!

### பாலின் ஏகராஜ், பம்பாய்-78

திருமணமான புதிதில் முதல் தடவையாகச் சமையல் செய்து புக்ககத்தில் அனைவரையும் அமரச் செய்து பரிமாறினேன். கண்டிப்புக்குப் பெயர் போனவர் என் மாமனார். முதல் கவளத்தை அவர் வாயில் வைத்ததுமே 'நறுக்'கென்று கடிபட்டது ஒரு கல். பதறிப் போனேன். "சோற்றிலே கல் கிடக்குதோ மாமா?" என்று நயமாக விசாரித்தேன். அதற்கு அவர் மிகவும்சீரியஸாக, "இல்லேம்மா, ஊடே ஊடே சோறும் கிடக்குது!" என்றாரே பார்க்கலாம்.

குபீரென்று சிரித்து விட்டேன். மாமனாரும் என்னை ஏறிட்டுப் பார்த்து விட்டுச் சிரித்து விட்டார். என் நடுக்கம் ஓடியே போய் விட்டது!

நா. பாஸ்கர், திருச்சி

அண்ணன் வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அண்ணி சளசளவென்றுபேசிக் கொண்டே பரிமாறினார். அண்ணன், ''இங்கே பாரு, ஒண்ணு சாப்பாடு போடு; இல்லே பேசு. இரண்டையும் ஒரே நேரத்தில் செய்யாதே'' என்றார். அண்ணி ''ஏன்?'' எனக் கேட்டதும், ''ஒரே நேரத்தில் என்னால் இரண்டு கஷ்டங்களையும் பட முடியாது!'' என்றாரே பார்க்கலாம். அண்ணி உள்பட அனைவரும் குபீரென்று சிரித்து விட்டோம்!

சரஸ்வதி சேதுராமன், புதுதில்லி

அம்மா பூசணி அல்வா கிளறியிருந்தாள். தம்பி ரகு, ''முந்திரிப் பருப்பு போட்டிருக்கியா?'' என்றான். ''சரிக்கு சரி போட்டிருக்கேன்'' என்றாள் அம்மா. ரகு ஒரு விள்ளலைக் கடித்து விட்டு, ''என்னம்மா ஒரு முந்திரி கூட அகப்படலையே!'' என்றான். ''அதான் சரிக்குச் சரி போட்டிருக்கேன் என்றேனே. ஒரு பூசணிக்காய்க்கு ஒரு முந்திரி போட்டிருக்கேன்!'' என்றாள் அம்மா!

கே. லலிதா, திருச்செங்கோடு

டெஸ்பாட்ச் கிளார்க்காக வேலை பார்த்து வருகிறார் என் கணவர். அன்று வீடு திரும்பி இரவு சாப்பாட்டுக்கு அமர்ந்ததும், ''ஆபீசுக்கு அல்வா டிபன் பண்ணி அனுப்பினேனே எப்படி இருந்தது?'' என்று கேட்டேன், ஆசையாக.

''தூறு கவர் ஒட்டச் சரியாக இருந்தது!'' என்று போட்டாரே ஒரு போடு!

எஸ். உமாமகேஸ்வரி, சேலம்

நாலு மாதங்களுக்கு முன் எங்கள் வீட்டுக்கு காஸ் ஸிலிண்டர் கிடைத்தது. அதைப் பார்க்க வந்த பக்கத்து வீட்டுப் பெண் புது அடுப்பு அழகாக எரிவதாகப் பாராட்டிவிட்டு ஸிலிண்டரைப் பார்த்தாள். ''அது சரி, அடுப்பைப் புதுசா வாங்கிட்டு இதை மட்டும் ஏங்க பழசா வாங்கினீங்க?'' என்று அப்பாவித்தனமாகக் கேட்ட போது சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தாலும் பிறகு கட்டிக் கொண்டு விவரம் சொன்னேன்.

எஸ். ஞானம்பாள், இராதாபுரம்

கொழுந்தனுக்குச் சீமந்தம். என் கணவர் பிற்பகல் வண்டிக்கு டில்லி செல்ல வேண்டும். நானோ அடுப்படியில் மும்முரமாக வேலையில் இருந்தேன். கணவர் ஊருக்குப் புறப்படுவதால் என்னிடம் சற்றுப் பேசும் ஆர்வத்தில் சமையலறையிலே என்னையே சுற்றிச் சுற்றி வந்தார். மாமியார் உரத்த குரலில், ''உன் ஆம்படையான் அடுப்படியில் என்ன செய்யறான்?'' என்று கேட்க, துடுக்கான நாத்தனார், ''பாயசத்துக்கு உப்பு போதுமான்னு பார்த்துக் கொண்டிருப்பான்'' என்று கூற என் கணவர் வெட்கத்துடன் வெளியேறியதை இன்று நினைத்தாலும் புன்னகை மலர்கிறது.

வீ. கீதா, கலோல் (வடக்கு குஜராத்)

கல்யாணமான புதிதில் ரமா மாமனுக்குப் பரிமாறிக் கொண்டிருந்தாள். சாதம் போடும் போது, ''கொட்டைப்பாக்கு'' என்று அவர் கூறவும், இவள் சமையலறையில் தேட ஆரம்பித்தாள். மாமியார், ''என்ன தேடுகிறாய்?'' எனவும், ''அப்பாவுக்குக் கொட்டைப் பாக்கு வேணுமாம்'' என்றாளே பார்க்கலாம்!

பாலா லக்ஷ்மண், கல்கத்தா

என் மூன்று வயதுப் பையன் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்ததும் பால்

காய்ச்சிக் கொண்டிருந்த என்னிடம், ''அம்மா! இந்த மிஸ்ஸுக்கு ஒன்றுமே தெரியலே'' என்றான். ''என்ன?'' என்று விசாரித்தேன். ''பால் எங்கிருந்து கிடைக்கிறது?'' என்று கேட்டான். நான், ''பட்டனை அமுக்கினால் பால் வரும்'' என்றேன். மிஸ். ''மாடுதான் பால் கொடுக்கும்!'' என்கிறா! நம்ம தெருக்கோடியிலே பட்டனை அமுக்கினால் பால் வருதோல்லியோ, ஏன் மிஸ்ஸுக்குத் தெரியலே?'' என்றான்.

**ஏ. கணபதி, நெல்லை**

தனிக்குடித்தனம் தொடங்கிய புதுமணத் தம்பதி நாங்கள். தினமும் காலை பஸ் ஏறி வெளியூர் பள்ளிக்கு வேலைக்குச் சென்று மாலையில் திரும்பி வரும் மனைவி ஒருநாள் வரத் தாமதமாகி விட்டதால் நான் பரிவுடன், ''நான் அதுவேணும் இதுவேணும் என்று அடம் பிடிக்க மாட்டேன். நீ என்ன போட்டாலும் சரிதான். இப்ப என்ன போடப் போகிறாய்?'' என்றேன்.

''பட்டினி'' என்று பளிச்சென்று கூறிக் குறும்பாக நகைத்தாள் மனைவி!

**பி. எஸ். ஜம்புநாதன், வாலாஜாபாத்**

''இந்த மாதம் வழக்கத்தை விட ஒரு வாரத்துக்கு மேல் தள்ளிவிட்டது'' என்றாள் மனைவி.



நான் ஒரே சந்தோஷத்துடன் அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''ஊருக்கு உடனே கடிதம் எழுதறேன்'' எனவும், ஒன்றும் புரியாமல் அவள் திருதிருவென்று விழித்தாள்.

''முழுகாமலிருப்பதை உடனே எழுதிட வேண்டியதுதானே?'' என்றேன், மறுபடியும்.

''அதில்லைங்க! நான் சொன்னது காஸ் சிலிண்டரைப் பற்றிங்க'' என்று அவள் கூறியதும் காற்றுப் போன பலூனாகிவிட்டேன் என்றாலும் கூடவே சிரிப்பும் பொத்துக் கொண்டு வரத்தான் செய்தது.





**தில்லை சிவகாமி, ஸ்ரீவில்லிப்புத்தூர்**

கல்யாணமான புதிதில் சமையலறையில் என்னிடம் குறும்பு செய்த கணவரிடம், ''இங்கே மனுஷி வெந்து அவிந்து கொண்டிருக்கிறேன். கொஞ்சல் என்ன வேண்டிக் கிடக்கு?'' என்று செல்லமாகக் கடிந்து கொண்டேன். எனது ஊடலை மறவாமல், வேகாத இட்டிலி தட்டில் விழும்போதெல்லாம், ''நீ மட்டும் வெந்து விட்டு இட்டிலியை வேகாமல் காப்பாத்திட்டியே!''



என்று இன்றைக்கும் கிண்டல் செய்து வருகிறார் அவர்!

**எஸ். ரவி, வளவனூர்**

வேலை விஷயமாக வெளியூர் சென்ற அண்ணன் பதினைந்து நாள் கழித்துத்திரும்பியிருந்தார் — அண்ணி விசேஷமாகச் சமைத்திருந்தார். ஆனால் ஏனோ சாம்பார், ரசம், பொறியல் என்று எல்லாவற்றிலும் உப்பு சற்று தூக்கலாக இருந்தது. சாப்பிட்டுக் கொண்டிருந்த கடைசி தம்பி, ''அண்ணன் வந்ததும் அண்ணி உப்பிட்டாங்க!'' (உப்பு இட்டாங்க) என்று கூறவும் அண்ணனுக்கும் எனக்கும் சிரிப்பில் புரையேறியே விட்டது.

**''ராகமாலிகா'' வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்: எஸ். உமாமகேசுவரி**
**68, தாரமங்கலம் மெயின் வீதி**
**பழைய சூரமங்கலம், சேலம்-5**



# அன்பாக இருக்க வேண்டாம்!

கோமகள்

கார் போர்டிகோவில் வந்து நின்றது.

வாசு ஓடிச் சென்று விநயத்தோடு கதவைத் திறந்தான்.

"வாருங்கள்! வாருங்கள்!" குரலில் குழைந்த மரியாதையுடன் பசுபதியும், அலமேலுவும் உபசரித்தார்கள்.

காரிலிருந்து சாம்பமூர்த்தியும், அவர் பெண் ஸரளாவும் இறங்கினர்.

ஸரளாவை முழுவதும் அளப்பது போல் பார்த்த வாசு இதழ்க் கடைச்சிரிப்பில் அவளை எதிர்கொண்டான்.

கண்களின் சந்திப்பில் இனிமை விழாக் கொண்டாடியது.

நிறைவு! மனமெல்லாம் நிறைவு!

அவள் படிப்பு முடிவுறாத நிலையில் முடிந்து விட்ட திருமணம். படிப்பைத் தொடர்ந்து எம். ஏ. பட்டத்தை வாங்கி விட வேண்டும் என்ற அவளது தீவிரம். அதற்குத் தன் ஆமோதிப்பை வழங்கினான் வாசு.

"கல்யாணம் ஆனபிறகு, ஸரளா படிப்பை முடிக்கணும்னு என்ன வந்தது? கூட்டிக் கொண்டு வரச் சொல்லுடா வாசு!" அம்மாவின் தினசரி நச்சரிப்பு.

"ஏதோ ஆசைப்படறான்! படிப்பை முடிச்சுட்டு வந்துட்டுப் போகட்டுமே..." வாசுவின் நயமான சமாதானம்.

"வேடிக்கைதான்! கல்யாணமாகியும் கட்டை பிரம்மச்சாரி! மனைவி படிச்சுட்டு வரட்டும்னு காத்திருக்கிறானே இவன்...!" அப்பாவின் சங்கடமான சலிப்பு.

அப்பாவிற்குப் பதில் கூறுவது சாத்திய மில்லை. வாசு நகர்ந்தான்.

"அம்மா காபி!" வாசு குரல் கொடுத்த போது அடுக்களையிலிருந்து அம்மா சலித்துக் கொள்வது கேட்டது.

" ம்! ம்! இடுப்புவலி, உயிர் போறது. நானும் மருமகளைப் படைச் சேன்னு பேருதான்!"

"என்னம்மா ஆச்சு! உடம்பு சரி யில்லையா?" வாசு எழுந்து அடுக்களைக்கு வந்தான்.

"என்னவோ ஆச்சு. இந்தா காபி. இதை அப்பாகிட்டே கொடுத்துட்டு வந்து நீயும் காபியை எடுத்துக்கோ... அம்மம்மா! இன்னிக்கு எப்படித்தான் சமையலை முடிக்கப் போறேனோ தெரியலே."

"அம்மா! இன்னிக்குக் கோமளம் அத்தையை வந்து சமைக்கச் சொல்லேன்..."

"சொல்லுவேடா! கோமளத்தைக் கூப்பிட்டா என்ன அலட்சியமாகக் கேக்கறு தெரியுமா?"

"என்ன கேட்கறு?"

"மருமகளை அழைச்சுக்கிட்டு வந்து குடும்பம் நடத்த எனக்கு 'வக்கு' இல்லையாம்...!"

வாசுவுக்குச் சிரிப்புப் பொத்துக்கொண்டு வந்தது.

''என்னடா உனக்குச் சிரிப்பா இருக்கா?''

''பின்னே, என்னம்மா? இருபத்திநாலு மணி நேரமும் உனக்கு மருமகள் ஞாபகம் தானு?''

''உனக்கு மனைவி ஞாபகம் இல்லேன்னு தீர்ந்து போச்சு...எனக்குக் கூடவா மருமகள் நினைவு வராமல் போகும்?''

''ப்ளீஸ்ம்மா! அவள் ஏப்ரல் மாதம் முடிஞ்சுதான் வருவாள். அதுவரையிலும் நீ எனக்குக் கல்யாணம் ஆகல்லேன்னு நினைச்சுக் கோயேன்.''



இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள்: வாரங்கள். அவன் மனத்திலும் வசந்தகாலத் தின் மென்மைக் கனவுகள், காவியக் கற் பனைகள் சூழ்ந்துகொண்டன. மலரான அவள் முகத்துக்கு ஒரு வண்டாய், கொடியான அவள் உடலுக்கு ஒரு கொம்பாய், எழிலான இளமைக்கு ஒரு தலைவனாய் ஆகும் அந்த இனிய நேரத்துக்குக் காத்திருந்தான்!

''என்னடா வாசு! பிரமிச்சு நின்னுட்டே? மாமாவை வாங்கன்னு கூப்பிடத் தோண லியா?'' அம்மாவின் குரல் அவனைக் கற்பனை லோகத்திலிருந்து தரை தட்ட வைத்தது.

''உம்! வாங்க மாமா!'' என்று கூறிய கையோடு, ஸரளாவை நோட்டமிட்டான்.

முன்பிற்கு இப்போது உடற் செழுமையில், மதர்ப்பில் கூடியிருந்தாள். கண்களில் அறிவொளியும், சகஜபாவமும் கூடியிருந்தன.

''மாமா, அத்தைக்கு நமஸ்காரம் பண் ணிக்கோ!'' சாம்பமூர்த்தி கூறினார்.

ஸரளா இருவருக்கும் தனித்தனியாக வணங்கி எழுந்துவிட்டு, சட்டென, வாசு வின் காலிலும் வணங்கினாள்.

வாசுவுக்கு வெட்கத்தில் பேச்செழவில்லே. அவளைப் பற்றித் தூக்கவோ, அணைத்து எழுப்பவோ முயலாமல், ''என்ன இது? எழுந்திரு!'' என்றான் மெல்லிய குரலில்.

இவர்களது களிப்பைக் கண்டும் காணாதவர்களாக மகிழ்ந்து போனார்கள் பசுபதி யும், அலமேலுவும்.

இப்போதெல்லாம் காலே காபிக்கு அடுக்களைக்கே வந்து விடுகிறான் வாசு.

மகிழ்ச்சி மாறாத முகத் துடன் ஸரளா காபி கோப் பையைத் தரும்போது அவள் விரல் ஸ்பரிசம் உறைக்கிறது. உணர்வின் நாகத்திற்கு ஆயிரம் வடிகால்கள் இனிமை கூட்டிக் கொண்டிருந்தன.

அலமேலு நகர்ந்து விடுவாள்.

''என் ன ம் ம ா! இடுப்புவலி எப்படி யிருக்கு?''

''என் இடுப்புவலி கிடக்கட்டும்... ஸரளா வுக்குச் சீக்கிரமே இடுப்புவலி வரட்டும்..'' அம்மா பூடகமாகக் கூறுகிறாள்.

''புரிகிறதா?'' ஸரளா அவனைச் சீண்டு கிறாள்.

''ஊஹூம்!''

''எதற்கு ஊஹூம்''

''அம்மா சொல்வதற்குத்தான்!''

''எனப்படி?''

''தேச நலனுக்காகன்னு மட்டும் பொய் சொல்ல மாட்டேன். இளமை நலனுக்காக வும்தான்! ஒண்ணு செய்யேன் ஸரளா! கொஞ்ச நாளைக்கு வேலைக்குப் போகிறாயா? மொட்டு மொட்டென்று வீட்டில் உட்கார்ந் திராமல், பூப்பூவாய் ரூபாய் நோட்டுக்களை எண்ணிக் கொண்டு வரலாம்!''

''அம்மாவைக் கேட்டுப் பார்க்கறேன்..''

''வேண்டாம். நான் ஏற்பாடு பண்ணி னதும் சொல்லிடலாம்!''

''என்ன ஏற்பாடு?'' மூளையிலேயே இல்லி விடவேண்டும் என்ற தீவிரத்தைச் சுமந்த

வாறே, ஒன்றும் புரியாமல் கேட்பதுபோல் வினவினாள் அலமேலு.

''அம்மா! கொஞ்சநாள் ஸரளா வேலைக்கு போகட்டுமே...''

''ஏண்டா! உனக்கும் அந்தப் பைத்தியம் பிடிச்சுட்டதா? வம்சம் முதல்லே தழைக் கட்டும்டா... ஏம்மா ஸரளா? வேலைக்குப் போகணும்னு ஆசைப்படறியா?''

''நான் இல்லே அத்தை!... இவர்தான்... இவர்தான்...!''

''ஸரளா! எம். ஏ. படிப்பை கல்யாணத்துக்கப்புறமும் முடிச்சுட்டுத்தான் வருவேன்னு ஏன் ஆசைப்பட்டே? வேலைக்குப் போகலாம்னுதானே?'' குறுக்கிட்டான் வாசு.

''ஆரம்பிச்சுட்ட படிப்பை முழுமையாக முடிச்சுடணும்னுதான் நினைச்சேன்...''

''அப்போ வேலைக்குப் போகணும்னு நினைக்கலியா?''

''நிச்சயமாக இல்லே! பாட்டு கத்துக்கறவங்க எல்லாம் பாடகியாயிடறாங்களா? இல்லே நாட்டியம் கத்துக்கறவங்க எல்லாம் மேடையில் ஆடறாங்களா? எனக்குப்பிடிச்ச சப்ஜெக்ட் இந்த சைக்காலஜி...! அதைப் படிச்சு முடிச்சுடணுங்கற ஆர்வத்துலே தான், படிச்சு முடிச்சேன்...''

''ஆமாண்டா! பூஜையறையிலே ஏத்தி வைச்சுட்ட குத்து விளக்கை தெருப்பக்கம் வச்சா அங்கேயும் வெளிச்சம் தரும்னு நீ சொல்றே? ஆனால் எத்தனையோ பேர் வேலையில்லாமல் திண்டாடித் தெருவிலே நிக்கற போது, நமக்கு வசதியும், வழியும் இருக்கற போது, ஸரளா வேலைக்குப் போறதிலே என்னடா அர்த்தம்? அவள் வேலைக்குப் போகாமலேயே உங்கள் வாழ்க்கை நல்லாயிருக்கும். ஸரளா தன் இஷ்டப்படி இருக்கட்டும், விடுடா!'' அம்மா ஆசீர்வதிப்பது போல் கூறினாள்.

**ப**ழைய கலகலப்புக்கு வராமலேயே இருந்த வாசு சில தினங்களுக்குப் பின், அவளிடம் பூர்த்தி செய்யப்பட்ட ஒரு அப்ளிகேஷனைத் தந்தான்.

ஒரு தனியார் கல்லூரியில் உளவியல் உதவிப் பேராசிரியைக்கான அப்ளிகேஷன் அது!

''சார்! ஒரு நாலு நாள் எனக்கு லீவு வேணும்!''

''ஏனய்யா நாலு நாள் தூக்கத்தைக் கெடுத்துக்கறே?''

—எம். பாஸ்கர்.



அதைப் பார்த்ததும் ஸரளா ஆமோதிக்கும் வகையில் மெல்லச் சிரித்தவாறே ''கையெழுத்துப் போட்டு விடட்டுமா?'' என்றாள்.

தேம்பும் குழந்தை அன்பின் அமைதிக்கு ஏங்கி, அது கிடைக்கும்போது ஏற்படும் திருப்தியில் ஆனந்தப்படுவது போல் அவள் கணவனை நன்றியோடு பார்த்தாள்.

அந்த வேலை அவளுக்குக் கிடைத்து விட்டது. அவனுக்குத் தெரிந்தவர்கள் மூலம் சிபாரிசு செய்து அந்த வேலையை அவளுக்கு வாங்கிக் கொடுத்திருக்கிறான்.

கல்லூரி திறக்க ஒருமாதமிருந்தபோது தான் அவளுக்கு ஞாபக மூட்டினாள் அலமேலு. ஸரளாவும் அந்த ஞாபகத்தில் உந்தப்பட்டு கிளர்ச்சியடைந்தாள். ஒருசில தினங்களிலேயே எல்லோருக்கும் வெட்ட வெளிச்சமாயிற்று.

வாசுவுக்கு ஏமாற்றம். எப்படி நேர்ந்தது இது? ஸரளா தன்னைக் கேலியாகப் பார்க்கிறாளா என்று நோட்டமிட்டான்.

''அந்த மாத்திரையை நீ சரிவரச் சாப்பிடவில்லையா?''

''ஒருநாள் நான் சாப்பிடும்போது, அத்தை தடுத்துவிட்டு அதைப் பறித்துத் தூரப் போட்டுவிட்டார்கள்!''

''சை...! எல்லோரும் கங்கணம் கட்டிக் கொண்டு என்னை எதிர்க்கிறீர்களா?'' அவளை உறுத்துப் பார்த்தான் அவன். ''அதை ஏன் முன்பே சொல்லவில்லை. என்னை ஜெயிச்சுட்டதாக கர்வமா?''

ஸரளாவுக்குத் தொண்டையில் வார்த்தைகள் சிக்கிக் கொண்டன. தாய்மை அடைந்திருப்பதை எண்ணி ஒரு நிமிஷம் தான் மகிழாவிட்டாலும், கணவனின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டியிருக்கிறதே...

**அ**ன்று மாலை ஸரளா வேதனையில் முனகுவதைக் கண்டதும் அலமேலு பயந்து போய் அவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனாள். கருவைக் கலைக்க மாத்திரை சாப்பிட்டிருக்கிறாள் என்பதை டாக்டர் கூறியதும் அலமேலு திடுக்கிட்டாள்.

''அத்தை! கோவிச்சுக்காதீங்க... அவருக்கு இது பிடிக்கவில்லை...: எனக்கு வேறே வழி தெரியவில்லை.''

டாக்டர் அவளை அங்கேயே தங்கும்படி கூறியதால், ஸரளா ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டாள்.

அவளைப் பார்க்க வந்த வாசுவைப் பார்க்க மனம் நடுங்கியது.

''யாரைக் கேட்டு இப்படிப் பண்ணினே...?'' கடுமையாகக் கேட்டான் வாசு.

''வேலையில் சேர சிலநாள்தான் இருக்கிறது. அதற்குள் சரியாகி விட வேண்டும் என்றுதான்... அவசரமாக... இன்றே...''

''அபார்ஷன்ங்கறது எல்லோருக்குமே சரியாகி உயிர் கொடுத்துடறது இல்லே.''

''மன்னிச்சுடுங்க...'' இதழ்கள் நடுங்க, இதயம் குலுங்க, அழுகையின் நடுக்கம் குறையாத குரலோடு கூறினாள்.



கல்கி அலுவலகத்தில் மோனோ கீபோர்டு ஆப்பரேட்டராக பணிபுரியும் சிரஞ்சீவி பாலச்சந்திரன் (சென்னை அடையாறு ஸ்ரீ வெங்கட்ராம அய்யர் குமாரர்) அவர்களுக்கும் செங்கல்பட்டு அகிலி கிராமம் ஸ்ரீ கோதண்டராம அய்யர் அவர்களின் சகோதரர் குமாரத்தி சௌபாக்கியவதி குருலக்ஷ்மி அவர்களுக்கும் சென்னையை அடுத்த நங்கநல்லூரில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

# பட்டுப் புடவை

குடும்பத்தில் அனைவரும் பங்கேற்கலாம்



**போட்டி: 6 நான் பிரதமரானால்...**

ஓர் அற்புதம் நிகழ்ந்து நாளையே நீங்கள் பிரதமராகி விடுகிறீர்கள். முதல் முதலாக நீங்கள் பிறப்பிக்க விரும்பும் புதிய சட்டம் என்னவாக இருக்கும்? கீழே உள்ள வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்துக் கல்கி காரியாலயத்துக்கு அனுப்புங்கள். உறையின் மேல் ''நான் பிரதமரானால்...'' என்று குறிப்பிடவும். சாதுரியமான யோசனைகள் கல்கியில் பிரசுரமாகி சன்மானம் பெறும். தவிர குலுக்கல் முறையில் ஒரு வாசகருக்குப் பட்டுப் புடவைப் பரிசும் கிடைக்கும்.

முடிவு தேதி: 25.6.84.

நினைவிருக்கட்டும் 47 பட்டுபுடவைகளுள் ஒன்றை நீங்கள் பெற வாய்ப்புள்ளது. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

..............................

# பரிசுத்திட்டம்

''வாங்க மிஸ்டர் வாசு! தௌ ஷி ஈஸ் ஆல் ரைட்! புவர் கேர்ள்! இந்தக் காலத்துப் பெண்களே இப்படித்தான்! முதல் குழந்தையையே அபார்ட் பண்ண நினைக்கிறார்கள்'' என்றவாறே வந்த டாக்டர் அவளை மறுநாள் காலை வீட்டுக்கு அனுப்பி விடுவதாகக் கூறினார்.

''தேங்க்ஸ் டாக்டர்!''

''லுக் மிஸ்டர் வாசு! இப்படிப் பண்ணிட்டதால், நல்ல ஓய்வும், மன சந்துஷ்டியும் பேஷண்டுக்கு மிக அவசியம். நல்லவேளையாக கரு காப்பாற்றப்பட்டது. ஆனால் பிரசவம் வரையிலும் இல்லாட்டாலும் இன்னும் நான்கைந்து மாதங்களுக்கு அதிக நடமாட்டமோ, பளு தூக்குவதோ, வேகமாக நடப்பதும், ஓடுவதுமோ கூடாது. மனசிலேகூட பரபரப்பும், பதற்றமும் ஏற்படாமல்பார்த்துக்கங்க... ஓ. கே.?''

**வா**சு நல்லை சீவிக் கொண்டிருந்தான். தன் னருகே நிழலாடவும் திரும்பினான். ''சாப்பிடத்தானே ஒரு நிமிஷத்தில் வந்துடறேன்.''

''இன்னும் வேலைக்குச் சேர மூன்று தினங்கள்தான் இருக்கு.''

''ஹ! அதைத்தான் விட்டாச்சே...!''

''நான் போகிறேனே, டாக்டர் சொன்னபடி நடந்து கொள்ள முடியும்.''

''உம், உம்! நடைவண்டி குழந்தை மாதிரிதான் உன்னை டாக்டர் இருக்கச் சொல்றார்... நீ வீட்டிலேயே நடமாடிக்கிட்டு இரு போதும்...''

''அவள் தயங்கியவாறே: ''கோபிக்க மாட்டீங்கன்னு ஒண்ணு சொல்லட்டுமா?''

''பேச்சிலே ஜாக்கிரதை உணர்வு இருக்கு!''

''இப்போதே என்மேல் குறையும், கோபமும் ஏற்பட்டதுன்னு, வாழ்க்கை பூராவும் நான் சந்தோஷத்தை இழந்துடறேன். உங்களுக்கு மனம் நிறைவு படணும்னு, கோபம் விலகணும்னு நான் வேலைக்குப் போயே ஆகணும்!''

''ஓ! இந்த நிலையிலே, உனக்குத் தர வேண்டிய ஓய்வையும், மன நிம்மதியையும் நான் தரலேன்னு, உன்னையே இழந்துடுவேனோன்னு நான் பயப்படறது உனக்கு எப்படித் தெரியும்?''

''உங்களுக்கு... உங்களுக்கு... என் மேல் கோபமில்லையா?''

''இல்லவே இல்லை!''

''அப்படீன்னு... அப்படீன்னு... நீங்கள் ஏன்... என்னிடம் அன்பாக இல்லை?''

முகத்தைக் கைக்குட்டையால் துடைத்தவாறே கண்ணாடியில் பார்த்த வாசு, ''காரணமாகத்தான்! உன்மேலே கொஞ்ச நாளைக்கு நான் அன்பாகவே இருக்க வேண்டாம்னு டாக்டரம்மா அட்வைஸ் பண்ணி அனுப்பியிருக்காங்களே...!'' என்று கூறிய போது அவன் முகம் சிவந்து, முறுவல்கூடி, தன்னை மறைத்துக் கொள்ள, வேகமாக உள்ளே செல்வது புரிந்தது.




மூன்றாவது பிரச்சினையைத்
தீர்ப்பது மிக எளிது.
அதற்கு உதவுது—டார்டாய்ஸ்




பூமி நடுங்கும்படி புகைகொண்டு
தாக்குங்கள் கொசுக்களை
அதற்கு உதவுகிறது—டார்டாய்ஸ்




இராத் தூக்கத்தை
இழக்காமலிருக்க உதவுகிறது—டார்டாய்ஸ்






பிடுங்கியெடுக்கும் கொசுக்களை
அடியோடு விரட்டி அடிக்கிறது—டார்டாய்ஸ்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
:.போர்ட், பம்பாய்-400 023. :.போன்: 273831

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ், 7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32886

# சொல் ஒன்று வேண்டும்

22

அனுராதா ரமணன்

டாக்டர்கள் எதிர்பார்த்தது போல, பாபுவின் உயிர் அத்தனை சீக்கிரத்தில், அவன் உடலை விட்டுப் போக விரும்ப வில்லை. நினைவின்றிக் கட்டையோடு கட்டை யாக அவன் கிடக்க ஆரம்பித்து இன்றுடன் ஒரு வருடத்துக்கு மேலாகி விட்டது.

பங்காரு அம்மாள் — ராஜாவைப்போலீஸ் துரத்துவதாக வந்து சொன்னவள்தான். அதற்குப் பின் ஆளையே காணவில்லை....

அவளையும், அவள் பேத்தியையும் போலீஸ் பிடித்துக் கொண்டு போய் லாக் அப்பில் வைத்திருப்பதாக ஒரு செய்தி...

அதற்குப் பின் — அவன் குடும்பத்துடன் ஆந்திராவில் சொந்த ஊருக்கே சென்று விட்டதாக மற்றுமொரு செய்தி....

ராஜா என்ன ஆனான்...

தாராவுக்கு இது மாபெரும் உறுத்தல்...

இத்தனை காலமாக எங்கே — எப்படி ஒளிந்து உயிர் வாழ்கிறான் அவன்...

சாப்பாட்டுக்கு என்ன செய்கிறான்....

பிறந்த குழந்தையை அவன் பார்த்திருப் பானோ...

ஐயோ... இப்படி ஒரு மனிதனை — அவன் குடும்பத்திலிருந்து பிரித்து வைத்த பாவம் தான் — இன்று, எனக்கென ஒரு கூடே இல் லாமல் செய்து விட்டதா...

நல்லவன் ஒருவனை ஒரு வாய் சோற்றைக் கூட நிம்மதியாகச் சாப்பிட விடாததின் பலன்தான் — இன்று, என் புருஷனுக்கு நீராகாரமாய் ரப்பர் குழாய் மூலம் உணவு தர வேண்டியதாகி விட்டதா? கல் மாதிரி கணவனிருந்தும், ஒரு விதவை யைப் போல வாழ்ந்து கொண்டிருக்கும் உமாவின் சாபம் தான் இன்று என்னை வெற்றுத் தாலியைச் சுமக்க வைத்திருக் கிறதா...

தாரா — அணு அணுவாய்ச் சித்திரவதைப் பட்டு, தனக்குள்ளேயே வேதனைகளை மென்று, மென்று அரை உடம்பாகி விட்டாள்.

இதோ — இந்த நிமிஷத்தில் பாபுவின் பிராணன் போனால் கூட, ஏனென்று கேட்பதற்கு ஒரு நாதியில்லை...

இத்தனை நாள் வரையிலும், அவனைப் பெற்றவள் மட்டுமே அங்கு ஸ்திரமாய் உட்கார்ந்திருந்தாள். அவனது தகப்பன்கூட, ஒரே இடத்தில் இருக்கப் பிடிக்காமல் தன் போக்கில் ஊர் சுற்றக் கிளம்பி விட்டார்.

எப்பொழுதாவது பாபுவின் சகோதரன் வருவான்.

''அண்ணி, எனக்கு ஒரு கம்பெனியிலே இருந்து வேலைக்கு ஆர்டர் வந்திருக்கு... வாட்ச்மேன் வேலை...''

''.....''

''வேலைக்குப் போறதானு மாத்தி உடுத் திக்கக் கூட நல்லதா நாலு சட்டை, பேண்ட் இல்லே...''

''இப்ப என் கையிலே பணமே இல்லே... எல்லாம் மருந்துக்கும், டாக்டருக்குமே போயிட்டு இருக்கு...''

''நீங்க ஒரு பைத்தியம் அண்ணி. டாக்டர்தான் சொல்லிட்டார் இல்லே.... இனிமே, இவன் சாகற மட்டும் இப்படியே தான்னு... அப்புறமும் எதுக்காக அநாவசி யமா, மருந்துக்கும், டாக்டருக்கும் செல வழிக்கறீங்க...''

''அதுக்காக... கண் முன்னாடியே சாகட் டும்னு பார்த்துட்டு இருக்கச் சொல்றியா... ஒரு ஜீவன், அந்த உடம்புல இருக்கற மட்டும், அதுக்குத் தேவையானதைச் செஞ் சுடணும்...''

''என்னவோ செய்யுங்க... நீங்க எல் லோரும் படிச்சவங்க... உங்களுக்குத் தெரி யாததில்லை... நான் இப்ப எதுக்கு வந் தேன்னா... அண்ணனுக்கு இனிமே பேண்ட் ஷர்ட் இதெல்லாம் தேவை இல்லை.... இல்லையா... எங்கே, அவனுக்குத் தான் ரெண்டு ஜூங்கிய மாத்தி மாத்திக் கட்டி விட்டுட்டு இருக்கீங்களே... அதனாலே அவ னோட சட்டை, பேண்ட்லே நல்லதா இருக்

---

டைரக்டர்: ''கடைசியில் ஹீரோ வீடு ஏலத்துக்கு வருதா? ஹீரோயின் வீடு ஏலத்துக்கு வருதா?''

கதாசிரியர்: ''தயாரிப்பாளர் வீடு தான் ஏலத்துக்கு வருது!''

—கோவை தங்கபாரதி.



கறதுலே நாலு ஸெட் பார்த்துக்கொடுங்க.. எனக்கு உபயோகமா இருக்கும்...''

''இது கொஞ்சம் கூட நல்லாயில்லே.... அந்த மனுஷனோட கடைசி மூச்சு இருக்கற மட்டுமாவது கொஞ்சம் பொறுத்துக்குங்க.''

''எனக்கு நாளைக்கு டூட்டியிலே ஜாயின் பண்ணனும். நான் ஒண்ணும் — அண்ணனுக்குத் தேவையான பொருளைப் பிடுங்கிட்டுப் போகல்லியே... எப்படியிருந்தாலும் அண்ணன் காலமானதுக்குப் பிறகு, இந்தச் சட்டை துணிமணியெல்லாத்தையும் வச்சுக்கிட்டு என்ன பண்ணப் போறீங்க... பின்னாடி கொடுக்கறதை, இப்பவே கொடுத்துடுங்கன்னு கேட்கறேன்... இதுல என்ன தப்பு...''

தாரா, கண்ணீர் தளும்ப — அவனை ஒரு முறை எரித்து விடுவது போலப் பார்த்து விட்டு முகத்தைத் திருப்பிக் கொள்ள....

அவன், இவளது அனுமதிக்காகக் காத்திருக்காமல், தனக்கு வேண்டிய உடைகளை, பீரோவைத் திறந்து எடுத்துக் கொண்டு போனான்...

இவன் இப்படி, பாபுவின் சட்டைத்துணிகளை எடுத்துப் போனது தெரிந்து, மற்ற



தம்பிகளும், அக்கா, தங்கை புருஷன்களும் தினம் ஒருவராகப் படையெடுத்து, ஆளுக்கு ஒரு பொருளாகத் தூக்கிச் சென்றார்கள்.

''அண்ணி... எப்படியிருக்கீங்க... தினமும் பார்க்க வரணும்னுதான் நினைச்சுப் பேன்... எங்கே முடியறதே இல்லை... ஆமா, சின்னத் தம்பி வந்திட்டுப்போனானா.. எப்ப அண்ணன் படுத்தானோ — அப்பவே நினைச்சேன்... இவனுங்க ஆளுக்கு ஒரு பக்கமாய்ப் பறந்து வந்து கழுகு மாதிரி கொத்திட்டுப் போவாங்களேன்னு... ஏன், எங்க அண்ணனோட சட்டைத் துணிங்களிலே அக்கா, தங்கச்சிங்களுக்குப் பங்கு இல்லையா.. அட, அவங்களை மாதிரி நாங்க பேராசைப் பிடிச்சவங்க இல்லே... ஏதோ, பாபு அண்ணன் ஞாபகமா ஒரு ஜரிகை வேட்டியோ, சட்டையோ கொடுத்திடுங்க...போதும்....''

—இது ஒரு நாத்தி...

''இப்பவே சொல்லிட்டேன். பாபுவோட ரிஸ்ட்வாட்ச் எங்க வீட்டுக்காரருக்குத் தான். முந்தியே ஒரு தடவை இவரு பாபு கிட்ட கேட்டாரு... 'எங்கேடா மச்சான் இந்த வாட்சை வாங்கினே'ன்னு...'உனக்கு வேணுமின்னு புதுசா வாங்கித் தரேன் மாப்பிளே'ன்னு பாபுவும் சொல்லியிருக்கான்... அவன் நல்லபடியா இருந்தா — இத்தனை நாளைக்கு எங்க வீட்டுக்காரருக்கு அதே மாதிரி ஒரு வாட்ச் வாங்கித் தந்திருப்பான்... நான்னு அவனுக்கு உசிரு....''

— இது சின்ன நாத்தி...

பாபுவின் பனியன், ஷேவிங் செட் எதையுமே விட்டு வைக்கவில்லை இவர்கள்...

அம்மாக்காரி மட்டும் மகனுக்குக் காவலாய் அங்கேயே உட்கார்ந்திருந்தாள்.... சின்ன மகள் வந்து தனக்குப் பேறுகால உதவிக்குத் தாய் தன்னுடன் வரவேண்டும் என்று அழைக்கும் வரை...

மகனை விட்டுக் கிளம்பும் போது மாத்திரம் அந்த அம்மாள், மருமகளைப் பார்த்து நக்கலாக ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போனாள்.

''வேளா வேளைக்குக் கொஞ்சம் பாலையோ கஞ்சியையோ கரைச்சு குழாயில ஊத்திடு... நீ பாட்டுக்கு அலங்காரம் பண்ணிட்டுக் கிளம்பிடாதே...''

தாரா உதட்டைக் கடித்து, தன்னை மிகச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

ஓட்டப் பந்தயக்காரர்: ''திருடன் திருடிட்டு ஓடுறான்னு சொன்னியே...! பாரு, நான் நம்மூர் எல்லையம்மன் கோயிலைத் தொட்டுட்டு வந்திட்டேன்; அவன் பாதி தூரந்தான் ஓடிக்கிட்டிருக்கிறான்...!''



பாபுவின் தாய் போனதும், தாராவின் பாடு மிகவும் திண்டாட்டமாய்ப் போய் விட்டது. தன்னந்தனியே பாபுவை வீட்டில் விட்டுவிட்டு ஆபீசுக்குப் போக முடியாமல், அவனைக் கவனித்துக் கொள்ள ஒரு பையனை நியமித்தாள். அவனோ வீட்டிலிருப்பதைச் சுருட்டிக் கொண்டு, ஒருநாள் சொல்லாமல் கொள்ளாமல் ஓட... அதற்கடுத்து வந்த ஓரிரண்டு வேலையாட்களும் இது போலவே, சில நாட்கள் இருந்து விட்டு கழன்று கொள்ள...

தாரா—

பாபுவைக் கவனிப்பதா, ஆபீசுக்குப் போவதா என்றே புரியாமல் தடுமாறிக் கொண்டிருக்க...

போதாக் குறைக்கு — அந்த எலிவங்கின் சொந்தக்காரர்கள் வேறு — அவளைக் காலி செய்யச் சொல்லி வற்புறுத்த ஆரம்பித்து விட்டார்கள்.

அவர்களுக்கு, தாராவின் குடும்ப விவகாரமே பிடிக்கவில்லை...

''என்னிக்கு அந்த மனுஷன் மண்டையைப் போடப் போறானோ...''

''அவனோட குடும்பமே சந்தைக்கடை மாதிரி — எப்பவும் வீட்டைச் சுத்தி நின்னுக் கூச்சல் போட்டுட்டே கிடக்கு...''

''இப்பத்தான் அந்த மாமியார் கிழவி கூட இல்லே போல இருக்கே...''

''ஆமாமா... இருந்தாலும் ஒரு விதத்துலக் கஷ்டம்... இல்லைன்னாலும் ஒரு விதத்துலக் கஷ்டமாகத்தான் இருக்கு... அவ பாட்டுக்கு, புருஷனைக் கவனிக்கக் கூலிக்கு ஆளை வச்சுட்டு ஆபீசுக்கு ஓடறா... எவனுமே ஒழுங்காகக் கவனிக்கக் மாட்டேங்கறான்... யாருமே இல்லாத நேரத்துல உசிரு போச்சுன்னு, ஏன்னு கேட்க நாதியில்லே..''

''அதை விடு... இப்பவே கவனிச்சியோ.. அவுட்ஹவுஸ் பக்கம் போக முடியல்லே.... 'குப்பு'னு வாடை...

''எதுக்கு இந்தத் தொல்லை... பேசாம வீட்டைக் காலி பண்ணச் சொல்லிடு... இதுலே எல்லாம் பாவம், பரிதாபமெல்லாம் பார்த்தா நடக்கவே நடக்காது...''

தாராவுக்கு வீடு தேட வேண்டிய அவதியும் சேர்ந்து கொள்கிறது...

எங்கே போனாலும் முதல்கேள்வி இதுதான்:

''உங்க வீட்டுக்காரர் எங்கே வேலை பார்க்கறாரு?''

''அவர்... அவராலே வேலைக்குப் போக முடியாத நிலைமைங்க...''

''புரியல்லே...''

''ஒரு வருஷத்துக்கு முந்தி, 'அவுட்டோர் ஷூட்டிங்'கிலே ஹீரோவுக்கு டூப்பாச் சண்டை போடறப்ப, அடிபட்டு விழுந்திட்டாரு... அதுலேருந்து நினைவு திரும்பல்லே.. கோமா மயக்கத்துல கிடக்காரு...''

''ஓஹோ...''

''நான்தான் வேலையில இருக்கேன், மாசா மாசம் வாடகையை ஒழுங்காக் கொடுத்திடுவேன்...''

''அது சரி... நினைவு திரும்பாதுன்னு எப்பவுமே நினைவு திரும்பாதாமா...?''

''அப்படின்னு தான் டாக்டர்ஸ் சொல்றாங்க... அவர் சுயநினைவு பெறணும்னு

நான் தான் எல்லாத் தெய்வத்தையும் வேண்டிக்கிட்டிருக்கேன்...''

''இப்படியே எத்தனை நாளைக்கு....''

''.....''

அவன் சரத்தில் கனத்த இமைகளைத் தாழ்த்திக் கொள்வாள்.

''ஸாரி... இந்தமாதிரி ஒரு பேஷன்ட்டை வச்சுக்க எங்க வீடு வசதி படாது... குழந்தை குட்டிங்க இருக்கற எடம். பார்த்தா, பயந்துக்குவாங்க...''

போன இடங்களிலெல்லாம் இதுவேதான் பதில். ஒரேயொரு முறை — தாராவின் தந்தை காரில் அவள் வீட்டு வாசலில் வந்து நின்றார். காரை விட்டு இறங்கவில்லை... தாரா, வியர்வை வெள்ளமாய்ப் பெருக, ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள்.

தந்தையைக் கண்டதும் முகம் அளவற்ற வியப்பில் விரிந்தது.

அவரோ — காரை விட்டுக் கீழே இறங்கவேயில்லை...

''உள்ளே வாங்க...''

''நோ... எனக்கு அதுக்கெல்லாம் நேரமே இல்லே...''

''.....''

''விஷயமெல்லாம் கேள்விப்பட்டேன்.... பேசாம அவனைக் கொண்டு போய் ஏதாவது ஒரு ஹாஸ்பிடல்லே சேர்த்துடு... என் கூட நீ மட்டும் கிளம்பி வா... பெத்த தோஷத்துக்காக உனக்கு வேணுமானா சோறு, துணி கொடுத்துக் காப்பாத்தறேன்...''

''உங்களுக்கு இருக்கற பிடிவாதத்துல கால் பங்காவது எனக்கும் இருக்கும் இல்லையா... அவர் மூச்சு பிரியற மட்டும் நானும் அவரை விட்டுப் பிரியறதா இல்லே... அவர் கெட்டவர்தான்... எனக்கு எத்தனையோ துரோகம் பண்ணியிருக்கார்தான்... இருந்தாலும், தொட்டுத் தாலி கட்டினவர்... அவர் மரணப் படுக்கையில கிடக்கறச்சே, அவரோட குறைகளை ஆராயறது ரொம்பத் தப்பு... இந்த நிமிஷத்துல அவர் என் குழந்தை... எந்த ஒரு தாயும், தன் குழந்தையைத் தவிக்க விட்டுட்டு, தான் மட்டும் பால் சோறு சாப்பிட மாட்டா... நான் வரேன்...''

அவள் கிளம்பி விட்டாள். அவளைப் பெற்றவரும் உறுமியபடி காரைக் கிளப்பினார்...

இங்கு இந்தப் போராட்டம் நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில்....

பரந்தாமன், தன்னெதிரே நடைவண்டியைப் பிடித்தபடி தளர்நடை நடக்கும் ஒரு வயசு பாலகனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறார்...

அச்சு — அப்படியே ராஜாவின் முகச் சாயல்...

பாலகிருஷ்ணன் போல — குழந்தை என்னமாய் இருக்கிறான்...

இவனது சிரிப்பையும் விளையாட்டையும் பார்க்கப் பெற்றவனுக்குக் கொடுத்து வைக்கவில்லையே...

பரந்தாமனுக்குப் பின்னால் நின்றிருந்த மீனாட்சி பெருமூச்செறிகிறாள்.

(தொடரும்)



## அருள்வாக்கு

நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை என்பதிலேயேவே ஒருத்தனுக்குப் பரம உத்தம தர்மத்தை விதியாக வைக்கிற தாத்பர்யம் அடங்கியிருக்கிறது. அத்தனை பேரும் நல்லவனாகத்தானிருக்க வேண்டுமென்றால் முடியாது. ஒரு நல்லவன் இருந்தாலே அவனை உத்தேசித்து அத்தனை பேருக்கும் மழை பெய்து விடுகிறது என்று பழமொழி சொன்னார்கள். ஸமூஹத்தில் ஒரு பிரிவு உத்தம தர்மத்தை அநுஷ்டித்தாலே போதும். அதன் பலன் அத்தனை பிரிவுகளையும் சேர்ந்துவிடும். சிலருடைய அநுஷ்டானத்தாலேயே ஸகலருக்கும் தர்ம மழை, அன்புமழை, ஆண்டவனுடைய அருள் மழை கிடைத்து விடும்படியாக வர்ணாச்ரம விபாகம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

அவனவன் எந்தக் கர்மத்திலிருக்கிறானோ அதற்கேற்ப அவனவன் தர்மம், ஆசாரங்கள் இருக்கும். ஒவ்வொருத்தனும் தன்னுடைய கர்மத்தை மனசில் காமம், க்ரோதம் அதிகம் இல்லாமல், அதாவது ஆசை, த்வேஷம் அதிகமில்லாமல் செய்ய வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்




தேவிபாலா

உமாவுக்கு ஒருவிதத்தில் நெஞ்சு கொள்ளாச் சந்தோஷம்... இன்னும் ஒரு வாரத்தில் ரஞ்சனிக்குக்கல்யாணம்... தனக்கு விடுதலை...

''என்ன உமா, தப்பிச்சே நீ! குட்டிச் சாத்தானுக்குக் கல்யாணம் நிச்சயமாச்சு ஒரு வழியா...''

''உரக்கப் பேச வேணும். இவர் காதுல விழுந்தா என்னை வெட்டிப் போட்டுடுவார். தங்கையைச் சொன்னா அவரால பொறுத்துக்கவே முடியாது.''

''அவ போடற ஆட்டம் புரியுமா உன் புருஷனுக்கு?''

''நேர்ல அவர் பார்க்கலே. எடுத்துச் சொன்னா எனக்கு வசவுதான் மிச்சம்.''

''என்ன ஆம்பிளேடி...''

''விடுங்க. அப்பா அம்மா இல்லாத பொண்ணு. இவரே ஆளாக்கினதாலே நேசம் விட்டுப் போகலே. அவ வர்ரா அப்புறமாப் பேசலாம்.''

''மன்னி... என் ஜார்ஜெட் ஸாரியை அயர்ன் பண்ணி வைக்கச்சொன்னேனே, மறந்துட்டியா? உனக்கு வரவர சோம்பேறித் தனம் ரொம்ப அதிகமாப் போச்சு.''

''தோ பண்ணிடறேன் ரஞ்சனி. காஃபி குடிச்சியோ நீ? பிளாஸ்கில் இருக்கு.''

''கருமம் கழுநீராட்டம். எவ குடிப்போ? அண்ணா ஊர் சுத்தற 'ரெப்' உத்தியோகம், பிழைச்சான்! இல்லன்னா உன் கைச் சமையலைச் சாப்பிட்டே ஆயுசுல பாதி அம்போன்னு போயிருக்கும்....'' நெருப்புத் துண்டுகளாக வார்த்தைகளைத் துப்பி விட்டுப் போய்க் கொண்டே இருக்கிறாள் ரஞ்சனி.

கண்ணேரம் பளபளக்க அசையாமல் நிற்கிறாள் உமா. இப்போதெல்லாம் இது மரத்து விட்டது அவளுக்கு.

ரஞ்சனி ஒரு ஸாடிஸ்டோ என்று தோன்றும். உமாவைக் காயப்படுத்திப் பார்ப்பதில் அவளுக்கு ஒரு குரூர சந்தோஷம்.

அது ஏனென்று ஆரம்பத்தில் உமாவுக்குப் புரியவில்லை.

போகப் போகத்தான் தெரிந்தது.

அண்ணா தன் சொத்து... தனக்கு மட்டும் தான் சொந்தம். அதைப் பங்கு போட வந்த மன்னியை ஒரு விரோதமாகப் பார்க்கத் தொடங்கி விட்டாள் ரஞ்சனி.

ராம் தாலியை உமாவின் கழுத்தில் வைத்த மறு நிமிஷமே, மூன்று முடிச்சைப் போடும் ரஞ்சனி முகம் சிவந்து போனதுதான் நிஜம்.

அன்றிலிருந்து...

விளையாட்டுப் போல ஆரம்பித்து...

ராமுக்கு முன்னால் கொஞ்சமும்...

பின்னால் ஏராளமுமாக...

உமாவைப் பல கோணங்களில் வறுத்து எடுக்க ஆரம்பித்தாள்.

பிரச்னையைக் கணவனிடம் கொண்டு போனபோது, தங்கையை 'குழந்தை' என்று ஒரே வார்த்தையில் சொல்லி இவள் வாய்க்குப் பூட்டுப் போட்டதுதான் உண்மை.

அந்த ரஞ்சனிக்கு அடுத்த வாரம் கல்யாணம்.

அப்பாடி! பிழைத்தோம் என்றிருந்தது உமாவுக்கு.

''மாப்பிள்ளையை நீ பாக்கலியா உமா?'' பக்கத்து வீட்டு மாமி கேட்கிறாள்.

''இல்லே மாமி... திருச்சில இவரோட அத்தை வீட்டுக்கு ரஞ்சனியைக் கூட்டிட்டுப் போயிட்டார். அங்க வச்சுத்தான் பொண்ணு பார்த்தாங்க. கல்யாணத்தன்னிக்குப் பார்த்துண்டாப் போச்சு.''

மற்ற ஏற்பாடுகள் துரிதமாக நடக்கத் தொடங்க, சத்திரத்தில் அன்று மாலை மூன்று மணி, தன் வாழ்க்கையில் முக்கியமான ஒரு திருப்பத்தை ஏற்படுத்தப் போகிறது என்பது உமாவுக்கு அப்போது தெரியாது.

ரஞ்சனிக்குத் தலையைப் பின்னிப் பூ வைத்துக் கொண்டிருந்தாள் உமா.

பரபரக்க ஓடிவந்தான் ராம்.

''உமா, சீக்கிரம் ஆரத்திக் கட்டோட வா... மாப்பிள்ளை ஆத்துக்காரா எல்லாரும் வந்தாச்சு..''

சுறுசுறுப்பாக இயங்கிய உமா, ஆரத்தி கரைத்து எடுத்துக் கொண்டு வாசலுக்கு வந்தாள். தனக்கே உள்ள இயல்பான கூச்சத்தோடு ஆரத்தி சுற்றியவள் நெற்றியில் பொட்டு வைக்க நிமிர்ந்தபோது...

நிமிர்ந்தபோது....

அந்தச் சத்திரமே தலைகீழாகச் சுற்றியது. எதிரே....

பாலா...

அவளுடைய பாலா...



அவனுடைய முகத்திலும் அதிர்ச்சி அப்பட்டமாகத் தெரிந்தது.

ஒருவாறு சமாளித்துக் கொண்டு உள்ளே போவதற்குள் ஆடிப்போய் விட்டாள் உமா.

பாலாவா?

என் பாலாவா இந்த வீட்டு மாப்பிள்ளை?

'இல்லே என் பாலான்னு நான் நினைக்கறது பாவம்' அவசரமான அதிர்ச்சியோடு வந்த எண்ணத்தை அழித்தாள்.

''உமாகொஞ்சம் வாயேன்!'' ராம் மறுபடியும் ஓடிவந்தான்

''என்ன வேணும்?''

''எல்லாரும் டிபனுக்கு ஒக்காந்தாச்சு... நாமே நேரில் இருந்து பரிமாறினால்தான் மரியாதை... சீக்கிரம் வா''

மறுபடியும் சோதனை.

''மாப்பிள்ளைக்குப் பொங்கல் போடு!'

பாலாவுக்குப் பொங்கல் பிடிக்காதே! நாக்கு நுனிவரை வந்த வார்த்தைகளைக் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டு அவன் இலையில் பொங்கலை வைத்தாள்.

எதேச்சையாகப் பார்வை அவன் கண்களைச் சந்தித்தபோது அதிர்ந்தாள்.

அவளையே வைத்த கண் வாங்காமல் அவன் பார்ப்பது புரிந்தது.

வேணும் பாலா... ப்ளீஸ், இப்ப நான் இன்னொருத்தர் உடைமை... அது தப்பு பாலா.

'இன்னிக்குக் கண்ணுக்கு மை வச்சுக்கலியா உமா?'

'ஏன் பாலா?'

'கண்ணுவெங்காயமாட்டம்மொட்டையா இருக்கு. நல்லால்லே.'

'மறந்துட்டேன் பாலா.'

'எல்லாத்துலேயும் உனக்கு மறதி ஜாஸ்தி உமா.'

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

இந்தியாவில் வசிக்கும் நேபாள தேசத்தைச் சேர்ந்தவர்கள் — கூர்க்காக்கள் முதலியவர்கள் — வருஷம் தோறும் நேபாளுக்கு 200 கோடி ரூபாய் அனுப்புகிறார்களாம்.

ஆதாரம்: லண்டே.

தகவல்: வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி.

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦



'உனக்காக பீச்ல நான் காத்துட்டே இருப்பேன். என்னையும் மறந்துடப் போறே' ஒரு நாள்.

அவசரமாக அவன் வாயைக் கைகளால் மூடினாள். 'அப்படி இல்லேங்க பாலா!'

'வாயை நீ மூடறது பத்தி எனக்கு ஆட்சேபணை இல்லே. ஆனா கைகளால மூடியிருக்க வேணும்....'

'வேற எதால?'

அவன் குறும்புப் பார்வை பூச்சியாக உடலில் நெளிய,

'ச்சீ... உங்களுக்கு ரொம்பத் திமிரு.'

' நீ மூக்கைச் சுருக்கி இது மாதிரி சிணுங்கும்போது ரொம்ப அழகா இருக்கே உமா' இன்னும் நெருங்கி உட்கார்ந்து கொண்டான்.

சம்பந்தி வீட்டார்களைக் கவனிப்பதிலும் மற்ற கல்யாண வேலைகளிலும் பரபரப்பாக இருந்தாலும் நழுவி நழுவி ஓடும் நினைவுகளை நிறுத்தி வைக்க முடியவில்லை.

''மன்னி....''

''என்ன ரஞ்சனி?''

''காது செவிடா? கண்ணைத் தொறந்துட்டே கனாக் காணறியா?''

''நீ என்ன கேட்டேன்னு புரியலே...''

''சர்தான்.... நானும் போயிட்டா எங்கண்ணு பாடு அதோ கதிதான். வேளா வேளைக்கு அவனுக்குச் சாதமாவது போடு. அதுலேயும் மண்ணைப் போட்டுடாதே!''

'கருக்...'

எங்கண்ணு... எங்கண்ணு....

'எனக்கும் அவர் புருஷன்தான்டி....' அதற்கு மேல் நினைக்க முடியாமல், நினைக்கத் தோன்றாமல் அழவும் தெம்பில்லாமல் அப்படியே நின்றாள் உமா.

''எனக்குக் கல்யாணம்நிச்சயம் பண்ணப் போறு எங்கப்பா....''

''விளையாடறியா உமா...''

'இல்லே பாலா... நிஜந்தான்....'

'இன்னுமா நீ ஊமையா இருக்கே... சொல்லிட வேண்டியதுதானே உமா... உன்னால முடியல்லேன்னு நானே வரட்டுமா?'

உபயோகமில்லே பாலா... எங்கப்பாவுக்கு ஒரு செயல்... ஒரு தீர்மானம்தான். மாத்திக்க மாட்டார்.'

'நமக்குள்ள ஜாதிப் பிரச்னை கூட இல்லேயே உமா.'

'ஆனா காதல் கல்யாணத்தை எங்கப்பா ஒப்புக்க மாட்டார் பாலா.'

'அது தெரிஞ்சும் நீ காதலிச்சிருக்கக் கூடாது உமா.. ஒரு மனசை ஒடிச்சுப் போடறதுல உனக்கென்ன உமா சந்தோஷம்?'

'பாலா... நீங்களா இப்படிப் பேசறது? எதையுமே எதிர்த்துப் பேசச் சக்தியில்லாத ஓர் ஊமைப் பொண்ணு நான்னு உங்களுக்குக் கூடவா புரியலே?'

'நரி. நழுவிப் போகும்போது சிரிக்கவா முடியும்?'

'தெரியலே பாலா...'

மணலைத் தட்டிக் கொண்டே எழுந்தாள்.

'நான் போறேன் பாலா.'

'வரட்டுமான்னு கேக்கற உனக்கு இன்னிக்கு என்னாச்சு உமா?'

'வரப்போறதில்லேன்னு தெரிஞ்சப்புறம் பொய் எதுக்கு பாலா?'

அப்போது சந்தித்த பாலாவை, மாப்பிள்ளையாக இப்போதுதான் பார்க்கிறாள்.

இரவு. .

எல்லோரும் உறங்கிய பின்...

சமையல்கட்டின் பக்கமாக வந்த உமா, பின்னால் குரல் கேட்டு அதிர்ந்தாள்.

''பாலா, இங்க ஏன் நீங்க? யாராச்சும் பார்த்தா தப்பாத் தோணும்!'' பதறினாள்.

''நீ சந்தோஷமா இருக்கியா உமா?''

கரகரப்பான அவனது குரலில் இன்னமும் பழைய பாலா இருந்தான்.

''ம்...''

''என்னை அடியோடு மறந்துட்டியா உமா?''

''பாலா இதென்ன அபத்தம்? நான் இப்ப இன்னொருத்தர் மனைவி. நாளைவிலேருந்து நீங்க என் நாத்தனாருக்குப் புருஷன்... ப்ளீஸ் போயிருங்க பாலா... நம்மோட பழைய வாழ்க்கை தெரிஞ்சு போச்சுன்னு குடும்பத்தோட அமைதியும் கௌரவமும் சீர்குலைஞ்சு போயிடும்... ப்ளீஸ்! கனவுகள் தூங்கத் தொடங்கியாச்சு. தட்டி எழுப்பாதீங்க பாலா...''

''இல்லே உமா... என் நோக்கம் அது இல்லே. ஆனாலும் உன்னைப் பார்த்தப்ப பழைய ஞாபகங்களை என்னால அடக்க முடியலே... நெஞ்சை மறைச்சு உன்னைப் போல பொய் சொல்லத் தெரியலே எனக்கு...''

அவன் போய் நெடு நேரமாகியும் உமா அந்த இடத்தை விட்டு அசையவில்லை.

'நெஞ்சில பூத்த முதல் பூ'

உதட்டுக்குள் பல முறை அதைச் சொல்லிப் பார்த்துக் கொண்டபோது சந்தோஷமாக இருந்தது.

ஏதேதோ நினைவுகளோடு விழித்துக் கொண்டிருந்தவளுக்கு விடிந்தது கூடத் தெரியவில்லை.

''ஏன் ரஞ்சனி அழுறே?'' அவசரமாகக் கேட்டாள் உமா.

பதிலே வரவில்லை.

''சொல்லும்மா... என்னாச்சு?''

சரேலெனத் திரும்பிய ரஞ்சனி, ''சொன்னாத் தீர்த்து வைச்சுடப் போறியா?'' என்றாள்.

முகம் சுருங்கிப் போனாள் உமா.

''எங்கண்ணாவைக் கூப்பிடு.''

சற்று நேரத்தில் அவசரமாக ஓடிவந்தான் ராம்.

''என்னடா கண்ணம்மா.. கூப்பிட்டியா? என்ன வேணும் உனக்கு?''

''உங்கிட்டப் பேசணும் அண்ணா.. இப்பப் பேசினாத்தானே உண்டு..நாளையிலேருந்துநாந்தான் போயிடப் போறேனே...'' அழத் தொடங்கினாள்.

''அடடா. இதுக்கு அழலாமா? நீ உடனே போக வேணும். மாப்பிள்ளை கிட்டச் சொல்லிக் கொஞ்ச நாள் இருக்கச் சொல்றேன்...''



''இனிமே நான் ஜோக் எழுதறதை நிறுத்திடப் போறேன்!''

''வேண்டாம் சார்! உங்க ஜோக்கைப் படிக்கச் சொல்லித்தான் எனக்கு வேண்டாதவங்களையெல்லாம் பழி வாங்கிட்டு இருந்தேன்!''

—எம். பாஸ்கர்.

---

''அழகா இருக்கே... நடக்கற காரியமா இது? கல்யாணமானா எல்லாருமே ஒரு நாள் புருஷன் வீட்டுக்குப் போய்த்தானே ஆகணும்...'' — உமா.

''வாயை மூடு மன்னி... உனக்கு நான் எப்ப ஒழிஞ்சு போவேன்னுதானே ஆசை.''

''ஏன் ரஞ்சனி இப்படிப் பேசறே! நான் அந்த அர்த்தத்திலே பேசவே இல்லேயே....''

''நிச்சயமா உன் நோக்கம் அதுதான். அப்புறம் எங்கண்ணா முழுக்க உனக்குத்தானே....''

''ரஞ்சனி... நீ...''

''வாயை மூடு உமா... அவ தான் குழந்தை... என்னைப் பிரிஞ்சு போற சங்கடம் வேறே.. எல்லாமாச் சேர்ந்து குழம்பிப் போயிருக்கா.. நீ ஏன் எதிர்த்து வாதாடறே?''

'நீங்க என் புருஷன்..' நெஞ்சுக்குள் ஏக்கமாகச் சொல்லிக் கொண்டாள்.

''எங்கண்ணாவுக்கு எப்பவுமே முதல்ல நான் தான். அப்புறம்தான் எல்லாமே...'' உற்சாகமாகச் சொல்லிக் கொண்டே ''அண்ணா கூட நான் கொஞ்சம் தனியாப் பேசணும் மன்னி ''

அங்கிருந்து வெளியே வந்த உமாவுக்கு முதலில் வலித்தது.

'எங்கண்ணாவுக்கு எப்பவுமே முதல்ல நான்தான்.'

'என் நெஞ்சுல பூத்த முதல் பூ நீதான் உமா!'

'முதல் பூ!'

சட்டெனச் சிலிர்த்துப் போனாள்.

'அடிப் போடி...

'என் புருஷன் மனத்தில முதல் இடம் நீதான்னு பெருமைப்பட்டுக்காதே. உன் புருஷன் நெஞ்சுலேயும் முதல் ஆள் நான் தான்....'

விளையாட்டுத்தனமாக எழுந்த இந்த மகிழ்ச்சியில் தானும் ஏதோ ஒரு வகையில் ஜெயித்து விட்டோம் என்ற பெருமையில் சிரித்துக்கொண்டே அவள் நடந்து போவதை மாடியிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறான் பாலா.

## THE TEACHERS COLLEGE OF MUSIC

**THE MUSIC ACADEMY, MADRAS**

306, T. T. K. Road, Madras-600 014

**Reopens on Wednesday the 27th June 1984**

Principal: Sangita Kalanidhi Sri **T. M. Thiagarajan**

**APPLICATIONS ARE INVITED FOR THE FOLLOWING:**

1. A one year Teachers' Training Course in Music recognised by Govt. for employment as Music Teachers.
2. A two years Pre-Teachers' Training Course. Students completing the course will be admitted in the regular Course and will be sent for lower and higher grade examinations. Those who have some knowledge of Music may be admitted to the II year of this course.
3. An advanced class for training students for concerts.

**LAST DATE FOR RECEIPT OF APPLICATION: 20th June 1984**

PROSPECTUS AND APPLICATION FORM can be obtained from the Correspondent on payment of Rs. 2/-

---

**THE MUSIC ACADEMY, MADRAS**

306, T. T. K. Road, Madras-600 014

**VEENA CLASS**

**By Veenai Ranganayaki Rajagopalan** and others

FEES: Rs. 40/- for Senior and
Rs. 20/- for Junior per month

Classes have commenced from 1st June 1984



அழகு மிளிரும்
அடர்த்தியான
கூந்தலுக்கு
குண
கூந்தல் தைலம்

தலைமயிர் உதிர்தல் செம்பட்டை நிறம் பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்கு தேய்த்து வந்தால் தலைமயிர் நீண்டு கருத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு மண்டையில் சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்.

V.P.P. மூலம் பெற: ரூ.16.25 (தபால் செலவு இலவசம்)

விபரங்களுக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
த.பெ.எண்: 7, சேலம் 636 001

**எமது தைலம் கிடைக்குமிடங்கள்:** ரோமா மெடிக்கல்ஸ், மெமோரியல் ஹால் தெரு, சென்னை-3. வேலவன் மெடிக்கல்ஸ்—அமிஞ்சிக்கரை, சென்னை. திருமகள் மெடிக்கல்ஸ்—குடியாத்தம். சித்ரா மெடிக்கல்ஸ்—கடலூர். ரோசு மெடிக்கல்ஸ்—சேலம். முத்து மெடிக்கல்ஸ்—ஆத்தூர். கஸ்தூரிபா மெடிக்கல்ஸ்—நாமக்கல். கோபாலகிருஷ்ணா மெடிக்கல் ஸ்டோர்ஸ்—கிருஷ்ணகிரி. மூர்த்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ்—ஓசூர். காசிநாத் மெடிக்கல்ஸ்—கோவை. அன்னபூர்ணா மெடிக்கல்ஸ், ஜவகர் பஜார்—கரூர். சண்முகா மெடிக்கல் ஹால்— திருச்சி. குமார் மெடிக்கல்ஸ்—மதுரை. கோமதி மெடிக்கல்ஸ்—பூர்ணகலா தியேட்டர் அருகில், திருநெல்வேலி. பிரசாத் ஸ்டோர்ஸ்-25 K. G. சர்க்கிள், பெங்களூர். நல்ல பெருமாள்-கெமிஸ்ட் & டிரக்கிஸ்ட், நாகர்கோவில்.

# சேவாப்பூர் அம்மா

அவர் பிறந்த ஊர் பெல்ஜியம்; வளர்ந்த இடம் பணக்கார இல்லம். ஆனால், இன்று வாழ்வதோ சேவாப்பூரில், ஏழை எளியவர்களின் மத்தியில். சேவாப்பூர் அம்மா என்று எல்லோராலும் அன்போடு அழைக்கப்படும் திருமதி வியாப்ரோவோ தமிழில் அழகாகப் பேசுகிறார். அவருக்குத் தெரிந்த பிற மொழிகள், ஆங்கிலம், பிரஞ்சு மற்றும் பெல்ஜிய மொழி.

சேவாப்பூர், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் கடவூர் பஞ்சாயத்து யூனியனில் உள்ளது. ஒரு காலத்தில் காட்டுப் பிரதேசமாக இருந்த இடம் இன்று அம்மாவின் சேவையால் கழனியாக மாறி சேவாப்பூராகத் திகழ்கிறது. திருச்சிக்கும் திண்டுக்கல்லுக்குமிடையே மலைக் குன்றுகளின் மடியில் ரம்மியமான சூழ்நிலையில் அமைந்துள்ளது சேவாப்பூர்.

வியாப்ரோவோ 1920-ல் பிறந்தார். அவருடைய தந்தை டேமியன் — எக்கர் மாண்ட் பொது உடைமைச் சமுதாயத்தில் தீவிரப்பற்று கொண்டவராயிருந்தார். 1942-ல் வியாப்ரோவோ ஆந்ரேப்ரோவோ என்பவரை மணந்துகொண்டார். வைர வியாபாரத்தில் ஈடுபட்டு செல்வம் கொழிக்க வாழ்ந்த ஆந்ரேப்ரோவோ 1963-ல் திடீமென ஒரு விபத்தில் இறந்தார்.

கணவனை இழந்த வியாப்ரோவோ அமைதி, அகிம்சை மற்றும் காந்திய வழியில் அக்கறை காட்டத் தொடங்கினார். சுதந்திரம் அடைவதற்கு முன்பு இந்தியாவில் காந்திஜியோடு வாழ்ந்த லான்சே டெல் வாஸ்டோ என்பவர் அவருக்கு வழிகாட்டினார். காந்திஜி அந்த நண்பரை சாந்தி தாஸ் என்று அன்போடு பெயரிட்டு அழைப்பது வழக்கம். 1969-ல் சாந்தி தாசும் வியாப்ரோவோவும் இந்தியாவுக்கு வந்தனர்.

மதுரைக்கு அருகிலுள்ள கல்லுப்பட்டி காந்திநிகேதனில் வியோப்ரோவோ 18 மாதங்கள் வாழ்ந்து, ஏழைகளின் வறுமையையும் துயரத்தையும் உணர்ந்து, அவர்களை வாழ்விக்க உறுதி பூண்டார். பின்னர், தம் தாயகம் திரும்பி அரசாங்கத்தோடு ஆலோசனை நடத்தி, நண்பர்களோடு நிதியுதவிக்கு வழி செய்து, மீண்டும் இந்தியாவுக்கு வந்தார்.

அவர் வந்த சமயம் கடவூரில் 374 ஏக்கர் காட்டு நிலம் பூதானத்துக்காக வழங்கப்பட்டு ஏழைகளின் மறுவாழ்வுக்காக ஒப்படைக்கப்படத் தயாராக இருந்தது. வியாப்ரோவோ இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு தன்னலமற்ற தொண்டில் ஈடுபட்டார்.

கடவூர் காட்டுப் பகுதியில் விறகு பொறுக்கியும், விவசாயத் தொழிலில் ஈடுபட்டும் வறுமைப்போராட்டத்தில் திண்டாடிக்கொண்டு இருந்த இருநூறுக்கும் மேற்பட்ட குடும்பங்கள் சேவாப்பூர் அம்மாவின் துணையை நாடி, ஒன்று கூடினர். அவர்களை ஒன்றாக இணைத்து, இன்ப சேவா சங்கம் என்ற அமைப்பை வியாப்ரோவோ ஏற்படுத்தினார். இந்தச் சங்கத்தின் சின்னம் 'ஓம்'; அவர்களுக்குத் தெரிந்தஒரே மதம், சகோதர அன்பு. விரைவில், காட்டு நிலம் வயல்வெளியாக மாற்றப்பட்டது. நிலமற்ற 150 விவசாயக் குடும்பங்கள் தலா ஒரு ஏக்கரா நிலம்



✠ திருமதி வியாப்ரோவோ



✠ இன்ப சேவா சங்க மன்றம்



✖ ஒவ்வொரு வீட்டின் கொல்லை — எரிசாண வாயுத்தொட்டி

வழங்கப் பெற்றனர். காட்டோடைகள் கட்டுப்படுத்தப்பட்டுக் கிணறுகளும், பாசனக் குளங்களும் அமைக்கப்பட்டன. அம்மாவின் விடா முயற்சியால் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம் சேவாப்பூரில் செயல்பட்டது. இன்று சேவாப்பூரிலும் அதைச் சுற்றியுள்ள குக்கிராமங்களிலும் 300—க்கு மேற்பட்ட ஓட்டு வீடுகள் கட்டப்பட்டு, ஏழை எளியவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒரு கறவைமாடும் உழவு மாடும் வழங்கப்பட்டன. ஒவ்வொரு வீட்டின் கொல்லையிலும் சாண எரிவாயு சாதனம் நிறுவப்பட்டுள்ளது. இதனால் விளக்குக்கும், அடுப்புக்கும் செலவில்லை.

பெல்ஜிய அரசாங்கத்தின் நிதி உதவியும், அந்த நாட்டு மக்களின் கொடையும், ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின் நிதியும் சேவாப்பூரை இன்று ஒரு சிறந்த கிராமமாக மாற்றியுள்ளது. சேவாப்பூர் அம்மா இத்துடன் நிற்கவில்லை. படித்தும் வேலையற்றும் சும்மா இருக்க இளைஞர்களுக்கு உதவும் முறையில் சேவாப்பூரிலேயே பல சிறிய தொழில் பகுதிகளை அமைத்துத் தந்தார். தச்சுத் தொழில், வெல்டிங், நூற்பு, நெசவு, பாய் — நெசவு, கூடை முடைதல், முதலிய கைத் தொழில்கள் இங்கு துவக்கப்பட்டன. இங்கு உருவாகும் பொருள்கள் திருச்சியிலும், திண்டுக்கல்லிலும் விற்பனையாகின்றன.

இன்று சேவாப்பூரில் இந்துக்கள், கிறிஸ்துவர்கள், ஹரிஜனங்கள், பழங்குடி மக்கள், முஸ்லீம் குடும்பத்தினர் ஆகியோர் யாவரும் ஒரு தாய் மக்களாக, சகோதர பாசத்துடன் வாழ்ந்து வளம் கண்டுவருகின்றனர். இவர்களுடைய ஒற்றுமைக்கும், சகோதர அன்புக்கும், முன்னேற்ற வாழ்வுக்கும் மூல காரணமாக இருந்து தம் கடமையைத் தொடர்ந்து செய்து வருகிறார் சேவாப்பூர் அம்மா.

---

குடந்தை ரஞ்சனி சபாவில் மஹாராஜபுரம் திரு. சந்தானத்தின் இசைக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. இடையில் அவரை வரவேற்றுப் பேசிய பொருளாளர், ''திரு. சந்தானம் அவர்களை இம்மாதிரி நம் சபாவிற்கு அடிக்கடி வரும்படி மீண்டும் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன்'' என்றவுடன் பாடகர் குறுக்கிட்டு, ''மீண்டும் மீண்டும் வரும்படி தங்கள் வரும்படிதான் செய்ய வேண்டும்'' என்று சொன்னவுடன் சபையில் சிரிப்பொலி அதிர்ந்தது.

கூடச் சேர்ந்து சிரித்தவர்: சுமன்





அண்மையில் சென்னை வாணி மஹாலில் பல்கலைக்கழகங்களுக்கிடையே சங்கீதப் போட்டி நடைபெற்றது. 1984—1985—க்கான முதல் பரிசைப் பெற்றவர் பி. பாலகுமார். இவருக்கு சிதார், கிட்டார், வீணை, தப்லா, மாண்டலின், மௌத் ஆர்கன் எல்லாம் வாசிக்கத் தெரியும். இதில் வியத்தகு விசேஷம் என்னவென்றால் திரு. பாலகுமார் உடல் ஊனமுற்றவர். புதைபொருள் ஆராய்ச்சியில் எம். ஏ. முதலாண்டு படிக்கிறார்!





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| **முதல் பரிசு** | **ரூ.** | **1000** |
| **இரண்டாவது பரிசு** | **ரூ.** | **500** |
| **மூன்றாம் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்)** | **ரூ.** | **500** |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

❋ கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

❋ அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

❋ நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்பவேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

❋ உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

❋ பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

❋ கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

❋ எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

❋ சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

❋ போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 5 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.**

# குழந்தைகள் நோயும் மருத்துவமும்

○ டாக்டர் வி. பாலகோபால ராஜு.

சாதாரணமாக, குழந்தைகளுக்கு வைத்தியம் செய்வது, ஒரு கலை என்று கருதப்படுகிறது. ஏனென்றால், குழந்தைகளால் பெரியவர்களைப் போல் தம்முடைய நோய்க்குறிகளை விவரித்துச் சொல்ல முடியாது. இந்தத் துறையில் பழுத்த அனுபவம் பெற்ற டாக்டர் வி. பாலகோபால் ராஜு அவர்கள், ''குழந்தை மருத்துவம் வைத்தியத் துறையைச் சேர்ந்த ஒரு பிரிவு என்பதைவிட, சமூகநல இயலைச் சேர்ந்த ஒரு பிரிவு என்று சொல்வதுதான் பொருத்தமாயிருக்கும்'' என்கிறார்.

இதோ, டாக்டர் பேசுகிறார்:

ஒரு தாய், தனது பேறு காலத்தை முன்கூட்டியே திட்டமிட்டுச் செயல்பட்டால் அவருக்குப் பிறக்கும் குழந்தைக்கு வியாதி வரும் வாய்ப்பு மிகக் குறைவு. ஏனென்றால் ஒரு குழந்தையின் ஆரோக்கியம் கரு உருவாகிய காலத்திலிருந்தே தீர்மானிக்கப்படுகிறது. ஆக, நல்ல முறையில் மகப்பேறு அமைந்து தாயும், சேயும் மகிழ்ச்சியுடன் இருந்தாலே பல சிக்கல்கள் தடுக்கப்பட்டு விடுகின்றன.

ஒரு குழந்தை தொடர்ந்து அழாமல் இருந்தாலும், வேளா வேளைக்கு உணவு அருந்திக் கொண்டிருந்தாலும், நோய்க்கான அறிகுறிகள் வெளிப்படையாக இல்லாமல் இருந்தாலும் குழந்தை ஆரோக்கியத்துடன் இருக்கிறதென்று பலர் நினைக்கிறார்கள். இது தவறான கருத்து.

ஒரு குழந்தையின் ஆரோக்கியம் என்பது நோயில்லாமல் இருப்பது மட்டுமல்ல. ஓரளவு தன்னாலேயே நோயைத் தடுத்துக் கொள்ளும் சக்தியோடு, மனத்திலும் உடலிலும் ஏற்படும் சோர்வுகளைத் தாங்கிக் கொள்ளும் திறனுடனும் இருப்பதாகும்.

ஒரு தாய் தன் குழந்தை பருவத்திலேயே சந்தோஷத்துடனும், பெற்றோர்களின் பாசப் பரிவுடனும் வளர்ந்திருந்தால் தான் தன்னுடைய மகப்பேறு காலத்தில் அதே மகிழ்ச்சியான மனநிலையுடன் இருக்க முடியும். இதுவே குழந்தையின் ஆரோக்கியத்திற்கும் அடிப்படையாக அமைகிறது.

**1. தாய்மை காலத்திற்குத் திட்டமிடுதல்**

முக்கியமாக, வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் குறைந்தபட்சம் ஆறு மாதங்கள், பேறு காலத்துக்காகவே ஒதுக்கி அதற்குத் தேவையான விடுமுறை நாட்களைச் சேர்த்துவைத்துக் கொள்ள வேண்டும். இம்மாதிரி செய்யும் போது குடும்பத்தின் வருமானத்தை இழக்க வேண்டியிருப்பதில்லை.

தாய்மை அடைந்தவுடன் முதல் மூன்று மாதங்கள் மிகமிக முக்கியமான கட்டம். இந்தச் சமயத்தில் எந்தவிதமான மருந்துகளையும் உட்கொள்ளக் கூடாது. உதாரணமாக ஆஸ்பிரின் மற்றும் வைட்டமின் மாத்திரைகளை நிபுணரின் ஆலோசனை இல்லாமல் தாமாகவே உட்கொள்ளவே கூடாது. ஏனென்றால் கருவில் வளரும் குழந்தையை இவை பாதித்துக் குறையுடன் பிறப்பதற்குக் காரணமாகிறது. மகப்பேறு மருத்துவ நிபுணரோ அல்லது மருத்துவரோ ஒரு குறிப்பிட்ட மருந்து வளரும் கருவைப் பாதிக்காது என்று உறுதி அளித்தால் அன்றி எந்தவிதமான மருந்துகளையும் உபயோகிக்கக் கூடாது.

இப்போதெல்லாம் கருச்சிதைவை (அபார்ஷனை)த் தடுப்பதற்காக டாக்டர்கள் உதவியுடன் ஹார்மோன் ஊசிகள் மூலமாகத் தாய்மை மேலே வளரச்செய்கிறார்கள். இதனால் அங்க ஹீனத்துடன், மூளை வளர்ச்சிக் குன்றியும் குழந்தை பிறக்க வாய்ப்பு அதிகமாகிறது. ஆக, கருச்சிதைவுக்கான அறிகுறிகள் தீவிரமாக ஏற்பட்டால், அதைச் செயற்கை முறையில் எப்படியேனும் தடுத்துநிறுத்தி மேலே கருவை வளரச்செய்வது தவறு. ஏனென்றால் கருச்சிதைவு இயற்கையாகவே அந்தத் தாய்க்கு ஏற்பட்ட நிலை; அந்தக் கருவின் வளர்ச்சி தாய்க்கு ஒவ்வாது என்று இயற்கையே உருவாக்கும் விளைவு. இந்த



விளைவு. எப்படியேனும் ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஒரு தாயின் வேட்கையைத் தீர்த்து வைப்பதில், மருத்துவரும் வேறு வழியின்றி, தன் மனச்சாட்சிக்குப்புறம்பாகச் செயல்பட வைக்கிறது.

**ஹார்மோன் ஊசிகள்மூலமாகக் கருவை வளரச்செய்வது கட்டாயம் தடுக்கப்படவேண்டும்.**

பேறு காலத்தில் இருக்கும் தாய்மார்கள், சில குறிப்பிட்ட தடுப்பு முறைகளை அநுசரித்தல் அவசியம். முக்கியமாக டெடனஸ் நோய்த் தடுப்பு ஊசியை 20, 26, 32—ஆம் வாரங்களில் போட்டுக் கொள்ள வேண்டும். அல்லது 20 வாரங்களுக்குப் பிறகு, நான்கிலிருந்து ஆறு வாரங்களுக்கு ஒரு முறை, இந்த ஊசிகளை மூன்று தடவை போட்டுக்கொள்ள வேண்டும். ''இது குழந்தைக்கும் நல்லது. அவரவர்களின் தேவைக்கேற்ப, அடிக்கடி மகப்பேறு மருத்துவரிடம் சென்று தன் உடல் நிலையைப் பரிசோதித்துக் கொள்ளவேண்டும். முக்கியமாக ரத்தச் சோகை மற்றும் ஊட்டச் சத்துக் குறைவால் வருகின்ற நோய் முதலியவற்றை, ஆரம்ப கட்டத்திலேயே சிகிச்சை செய்தால், பிறக்கும் குழந்தை நல்ல வளர்ச்சியுடன் பிறக்கும். **தலைப்பிரசவம் நிச்சயமாக மகப்பேறு நிபுணரின் மேற்பார்வையிலோ, அல்லது அனுபவம் வாய்ந்த மகப்பேறு செவிலியர் உதவியுடனோ அல்லது மருத்துவ மனையிலோ தான் செய்து கொள்ள வேண்டும்.**

### 2. தாய்ப்பால்:

பிறந்த குழந்தைக்குத் தாய்ப்பால் மட்டுமே கொடுக்கவேண்டும். ஒருசில தாய்மார்களுக்கு, மார்பகத்தில் காம்பு உள்ளேயே அழுந்தியிருந்தால் தாய் கர்ப்பமாக இருக்கும் பொழுதே கடைசி 3–4 மாதங்களில் குளிக்கும் போது, காம்புகளை 10–15 தடவை இழுத்து விட்டுக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் குழந்தை சுலபமாகப் பாலை உறிஞ்சிக் குடிக்கச் சௌகரியமாக இருக்கும்.

பிறந்த அன்றே குழந்தைக்கு உணவுக்காகச் சர்க்கரை கலந்த நீரை அளிப்பது பரம்பரையாகக்கடைப்பிடிக்கப்பட்டு வரும் வழக்கம். இது மிகவும் தவறாகும். இதையே வீட்டில் மட்டுமல்லாமல் ஆஸ்பத்திரிகளிலும் கடைப்பிடிக்கிறார்கள். எவ்வளவு துரிதமாகக் குழந்தைக்குத்தாய்ப்பால் அளிக்கத் துவங்குகிறார்களோ அவ்வளவுக்கு நல்லது.

### 3. குழந்தைக்குச் சரியான முறையில் தாய்ப்பால் கொடுப்பது எப்படி?

ஒரு தாய் குழந்தையை மடியில் சாய்வாகக்கிடத்திக் கொண்டு மார்பகத்தை நன்றாக வாய்க்குள்ளே வைத்து, காம்பு நாக்கு மத்தியில் இருக்கும்படி



செய்து மூச்சுத் திணறாமல் உறிஞ்சுவதற்கு ஏற்றவாறு பாலைக் கொடுக்கவேண்டும். குழந்தையைப் படுக்க வைத்து (horizontal position) பால் கொடுக்கவே கூடாது. இதனால் குழந்தைக்குக் காது செவிடாகக் கூடும். ஏனென்றால் பால் மூக்கின் மூலமாகக் காதுக்கும் தொண்டைக்கும் இடையேயுள்ள குழாயில் சென்று இதன் மூலம் நோய் தொற்றிக் குழந்தையின் காது செவிடாகிறது. சீழ் வடியும் காதின் காரணமாகப் பல நோய்கள் பரவுகின்றன. குழந்தைக்குத் தாய்ப்பால் புகட்டும் போதும், துரதிர்ஷ்டவசமாகப் புட்டிப்பால்கொடுக்க நேர்ந்தாலும் அதன் தலையை உயர வைத்துத் தான் பாலைப் புகட்டவேண்டும்.

முதல் மூன்று மாதங்களுக்கு, இரவு — பகல் பாராமல் எவ்வளவு முறை வேண்டுமானாலும் பால் கொடுக்கலாம். கடிகாரத்தைப் பார்த்து, குழந்தைக்குப் பாலூட்டுவது ஒரு



தவறான செய்கை. சிறு குழந்தை பசியினால் அழும் போதெல்லாம் பாலூட்டு வது தவறே அல்ல.

பசியினால் தான் குழந்தை அழுகிறது என்று எப்படிக் கண்டுபிடிப்பது என்று கேட்கலாம். குழந்தையின் உதடுகள் துடித்து, நீண்ட நேரம் அழும். தோள் பட்டைப் பகுதியில் இருக்கும் படுக்கையின் துணி களைத் தலையைச் சாய்த்து உதட்டால் 'இழுக்கப்பார்க்கும். சுத்தமான கைவிரல்

ஆகவே தாய்ப்பால் கொடுத்துத்தான் ஆக வேண்டும்.

ஒரு குழந்தை அழும் போதெல்லாம் அதைக் கையில் எடுத்துச் சமா தானப்படுத்துவது தவறு என்றும், நாளாவட்டத்தில் இதுவே ஒரு பழக்கமாய் மாறி விடும் என்ற தவறான கருத்தும் நிலவி வருகிறது. இது மிகமிகத் தவறானது. குழந்தைக்குத் தெரிந்த ஒரே மொழி அழுகைதான். குழந்தை எவ்வளவோ

காமல் சலிக்காமல் அதைக் கையில் எடுத்துச் சமா தானப்படுத்துவது ஒரு தாயின் கடமை. இதுவே குழந்தைக்குத் தன்னம்பிக் கையை ஊட்டுகிறது. தான் தனியாக இல்லை; தாயின் ஆதரவு தனக்குத் தயாராக இருக்கிறது என்ற உணர்வே நாளாவட்டத்தில் அழுகையைக் குறைத்து மகிழ்ச்சியுடன் இருக்க உதவுகிறது.

5. குழந்தைக்குப் போதுமான

## பாப்பாவுக்குப் பாதுகாப்பு பெற்றோருக்குப் புரிப்பு!



திடீரென்று நினைத்துக் கொண்டு ஓயாமல் அழும் கைக்குழந்தையை எப்படிச் சமாதானப் படுத்துவது என்று புரியாமல் தவித்து அழுகை நிற்காமல் அதிகரிப்பதைக் கண்டு பயந்து போய், அவசரமாக மருத்துவ உதவி நாடி அது உடனடியாகக் கிடைக்காமல் திண்டாடி... இந்தத் துன்பங்களை எல்லாம் அறவே தவிர்க்க முடியாவிட்டாலும் தைரியமாகச் சமா ளிக்கக் கற்றுத் தருகிறது ஆலோசனா. தபால் மூலம் குழந்தை வளர்ப்பு வகுப்புகளை நடத்துவதே இந்நிறுவனத் தின் நோக்கம்.

பிரதி மாதமும் 15–ஆம் தேதி துவங்கி ஆறு மாதங்களுக்கு நடை பெறும் ஆலோசனாவின் அஞ்சல் வழி வகுப்புக்களில் சேர கட்டணம் ஐம்பது ரூபாய் மட்டுமே. கல்வி மொழி ஆங்கிலம். இரண்டு மாதங் களுக்கு ஒருமுறை நேர்முக வகுப்புக் களும் உண்டு.

கருவுற்றது முதல் குழந்தை பிறந்து வளரும் வரை ஒவ்வொரு கட்டத் திலும் என்னென்ன செய்ய வேண்டும் பெற்றோருக்கும் குழந்தை வளர்ப்போ ருக்கும் என்னென்ன தெரிந்திருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்து கிறது ஆலோசனா. இதில் விசேஷம் என்னவென்றால் இவ்வகுப்பில் சேரத் தனிப்பட்ட தகுதி தேவையில்லை. ஆண், பெண் இரு இனத்தவரும் பெற்றோர் ஸ்தானத்தில் இருந்தாலும் இல்லாவிட்டாலும், தாத்தா பாட்டி யாக இருந்தாலும், பள்ளி ஆசிரியரா கவோ, குழந்தை நல நிறுவனத் திலோ பணியாற்றுபவரானாலும் இவ் வகுப்பில் சேர்ந்து பயன் பெறலாம்.

தனிக் குடித்தன வாழ்க்கை முறை பெருகி வரும் இக்காலத்தில் இளம் பெற்றோர்களுக்கும் பெற்றோர்களா[illegible] போகும் இளைஞர்களுக்கும் தெளி[illegible] பும் தைரியமும் அளிக்கச் [illegible] வனம் ஆலோசனா.

களை மடக்கி, குழந்தையின் வாயில் வைத்தால், உடனே உறிஞ்சப் பார்க்கும்.

4. தாய்ப்பாலை ஏன் கொடுக்க வேண்டும்?

தாய்மை என்றாலே தியாகம்;

தாய்மை என்றால் பொறுமை;

தாயும் மனைவியும் ஒரே ஸ்தானமல்ல.

காரணங்களால் அழு[illegible] குளிரினாலோ வலியினாலோ ஏன் – தன் குரலைத் தானே கேட்பதற்குக் கூட அழு லாம். இந்த அழுகுரல், தாய் தன்னை அரவணைக்க வேண்டும்; சுற்றியுள்ள வர்கள் தன்னைக் கவனிக்க வேண்டும் என்பதற்காக எழும் முறையிடல். ஏனென் றால் பிறந்த குழந்தை ஆதரவற்ற ஒரு நிலையில் உள்ளது.

பிறந்த குழந்தை எப் போது அழுதாலும் அலுக்

தாய்ப்பால் இல்லை என்று எப்படித் தெரிந்துகொள்வது?

குழந்தை பால் குடித்த உடனேயே, அல்லது ஒரு மணி நேரத்துக்குப் பிறகே கூட விடாது அழுது கொண்டேயிருக்கும். இர வில் தூங்காமல் அழுதல்; ஆட்டுப் புழுக்கை போன்ற மலம் கழித்தல் – இவையும் அறிகுறிகளே. இது தண் ணீர்க் குறைவினால் ஏற்படு கிறது என்று தாய்மார்கள் குழந்தைக்குத் தண்ணீரை அதிகம் கொடுப்பார்கள்.

இது தவறு. அந்தக் குழந்தைக்குத் தேவைப்படுவது தாய்ப்பாலே. தண்ணீர் அல்ல. புட்டிப்பால் கொடுத்தாலும் அதை ஒரேயடியாக நீர்த்துக் கொடுக்கக் கூடாது.

தாய்ப்பால் குறைவாக இருந்தால் புட்டிப்பால் 2-3 தடவை, தாய்ப்பால் 2-3 தடவை என்று பிரித்துக் கொடுக்கக் கூடாது. ஏனென்றால் குழந்தை உறிஞ்ச உறிஞ்சத்தான் தாய்ப்பால் சுரக்கும். ஆக, அடிக்கடி தாய்ப்பால் கொடுப்பதால் இந்தக் குறையைத் தவிர்க்க முடியும். மேலும் புட்டிப்பால் கொடுக்கக்கொடுக்க தாய்ப்பாலும் குறைந்து விடும்.

**6. குழந்தைக்குத் திட உணவு எப்போது கொடுக்கலாம்?**

ஒரு குழந்தையின் வயது நான்கு அல்லது ஆறு மாதம் அடைந்த போது; அல்லது அதன் எடை பதினைந்து பவுண்டுக்குமேல் இருந்தால்; மற்றும் போதிய அளவு தாய்ப்பால் புகட்டியும் பசியுடன் அழுதால் — திட உணவு கொடுக்க ஆரம்பிக்கலாம். பொதுவாக, திட உணவைச் சீக்கிரமாகவோ, அல்லது தாமதித்தோ கொடுத்தல் தவறு.

**7. குழந்தைக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டலாமா?**

குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்ப்பதால் ஏற்படும் தீமைகள் பல. முதலாவது எண்ணெய்த் துளிகள் நுரையீரலுக்கு மூக்கு வழியாகச் சென்று, ஆஸ்த்துமா மற்றும் நிமோனியா போன்ற நோய்களைத் தோற்றுவிக்கிறது. நான்கு அல்லது ஐந்து வயதுக்கு மேற்பட்ட பெண் குழந்தைகளுக்கு, நன்றாகத் தலைமயிர் வளர்ந்த பிறகே எண்ணெய் தேய்க்கலாம். இதுகூட அவர்களின் கூந்தல் வளர்ச்சிக்குத் தான். எண்ணெய் தேய்த்துக் கொள்ளுவதனால் எந்த விதப் பயனும் இடையாது. இதைப் போலவே, வயிற்று வலிக்காக 'கிரைப் வாட்டர்' கொடுத்தல், விளக்கெண்ணெய் கொடுத்தல் போன்ற பழமையான வழக்கங்கள், குழந்தைகளுக்கு நல்லதை விடக்கெடுதலையே அதிகம் செய்கிறது என்பது என் கருத்து.





அட்டைப் படம்: [illegible]

வண்ணப்படம்:

ஏ. வி. பாஸ்கர்

**8. குழந்தைகளுக்கு என்னென்ன தடுப்பு ஊசிகள் அவசியம்?**

தடுப்பு ஊசிகளைக் குழந்தையின் இரண்டாம் மாத முடிவிலிருந்தே ஆரம்பிக்க வேண்டும். முதலாவது முத்தடுப்பு ஊசி மற்றும் போலியோச் சொட்டு, மாதம் ஒரு முறையாக முத்தடுப்பு ஊசி மூன்று முறை கொடுக்க வேண்டும். போலியோச் சொட்டு, குறைந்த பட்சம் ஆறு முறைகளாவது கொடுக்க வேண்டும் (அதிறாக் கிரமையாக இருக்க வேண்டுமானால், வருடத்துக்கு ஒரு முறையாக, போலியோச் சொட்டை ஐந்து–ஆறு வயது வரை கொடுக்கலாம்) முத்தடுப்பு ஊசி, போலியோச் சொட்டு மருந்து மூலமாக, இளம் பிள்ளை வாதம் (போலியோ) தொண்டை அடைப்பான் (டிப்தீரியா) ஜன்னி (டெட்டனஸ்), கக்குவான் (ஹூப்பிங் காஃப்) இந்த நான்கு நோய்கள் அறவே வராமல் தடுத்து விடலாம். இன்னும் சில வருடங்களில், போலியோ தடுப்பு ஊசியும் முத்தடுப்பு ஊசி மருந்தோடு சேர்த்துக் கொடுக்கும்வாய்ப்பு வரப்போகிறது.

குழந்தையின் ஒன்பதாம் மாதத்தில் தட்டம்மை (மீஸல்ஸ்) தடுப்பு ஊசி போட்டுவிடுவது நல்லது.

பி. ஸி. ஜி. ஊசியை அவரவர் குடும்பச் சூழ்நிலைக்கேற்ப, டாக்டரின் ஆலோசனைப்படி குழந்தைக்குப் போடலாம்.

**9. வைட்டமின் உள்ள ஊட்டச்சத்து கொடுப்பதா, வேண்டாமா?**

மேலை நாடுகளைப் போல், நமது நாட்டில் குழந்தைகளுக்கு என்று பிரத்தியேகமான உணவுகள் தயாரிக்கப்படுவதில்லை. சாதாரணமாக நம் வீடுகளிலே பெரியவர்களுக்காகச் செய்யப்படும் உணவிலே சற்றுக் காரம், உப்பு குறைத்து, குழந்தைகளுக்கும் கொடுக்கிறோம். அதிலும் காய்கறிகளைப் பெரும்பாலான குழந்தைகள் சாப்பிடுவதில்லை. ஆக, உடலுக்குத் தேவையான ஊட்டச் சத்து குறைவாக இருக்கலாம். வளரும் குழந்தைகளுக்கு, விசேஷமாகச் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட உணவுகள் கிடைக்காத வரை, ஒரு நல்ல மல்டி-வைட்டமின் மாத்திரையாகவோ, அல்லது சொட்டாகவோ கொடுப்பது நல்லது. இதைத் தவிர, புரதம் செறிந்த உணவும், சற்றுக் கூடுதலான வைட்டமின் ஸி–யும், கூடவே தாயின் அன்பும் பாசமும் இருந்தாலே குழந்தை ஆரோக்கியமாய் வளரும்.

**பிறந்த குழந்தைக்கு ஏற்படக் கூடிய சில நோய்கள்:**

பிறந்த குழந்தைக்கு, பொதுவாக நோயைத் தடுக்கும் சக்தி குறைவாகவே இருக்கும். இதனால் தான் இயற்கையே தாய்ப்

பாலின் மூலம் நோய்த் தடுப்புச் சக்தியை அளிக்கிறது: தாயின் அரவணைப்பில் இது கொடுக்கப்படும் பொழுது ஊட்டச் சத்தாகவும் மாறுகிறது. ஆயிரமே கொடுத்தால் கூட, தாய்ப்பாலுக்கு ஈடு — இணையாக எதுவும் கிடையாது. சோதனைக் குழாய் மூலம் குழந்தைகளைச் செயற்கை முறையில் உற்பத்தி செய்து விட முடியும். ஆனால் இன்றுவரை விஞ்ஞான ரீதியாக, தாய்ப்பாலுக்கு இணையாக, மனித உடலுக்கு வெளியே யாராலும் ஒரு சொட்டுப் பாலைக் கூடத் தயாரிக்க முடிந்ததில்லை. மாட்டுப் பால் கன்றுக்காகச் சுரக்கிறது. இதையே நம் குழந்தைக்கு அளிப்பது தாய்ப்பாலுக்குச் சமம் என்று கருதவே கூடாது. ஆக பல சாதாரண நோய்களைத் தாய்ப்பாலின் சக்தியே தடுத்து விடுகிறது. இதையும் மீறிச் சில நோய்க்குறிகள் தோன்றலாம். உதாரணமாக முதல் மூன்று மாதங்களிலே தோன்றக் கூடிய நோய்கள் நுரையீரலையும், உணவுப்பாதையையும் சார்ந்த நோய்களாகும். முதல் மூன்று மாதங்களில், எந்தவிதமான நோய்த் தொற்றாக இருந்தாலும் டாக்டரை அணுக வேண்டும். முக்கியமாக, பேதி மற்றும் நுரையீரல் நோய்த் தொற்று.

### 1. குழந்தைக்குப் பேதி (இரண்டு வயது வரை):

மிகுந்த தண்ணீராய் ஒரு குழந்தை மலம் கழித்தல், நுரையுடனும் நாற்றத்துடனும் மலம் இருத்தல், சளியுடன் கலந்து பேதியாதல் மற்றும் ரத்தத்துடன் கலந்து பேதியாதல், இவை உடனே டாக்டரிடம் எடுத்துச் செல்லப்பட வேண்டிய அறிகுறிகள்.

இதேபோன்று, ஜுரத்துடன், குழந்தைக்குமூச்சுத் திணறலும் ஏற்பட்டுத்தவித்தால் டாக்டரிடம் உடனே எடுத்துச் செல்ல வேண்டும்.

### 2. குழந்தை விடாமல் அழுதல்:

வயிற்றில் குடல் முறுக்கத்தால் ஏற்படும் வலி, குழந்தையை மிகவும் கதறச் செய்யும். இந்த ஒரு வகையைத் தவிர பெரும்பாலான காரணங்கள் சாதாரணமாகத் தான் இருக்கும். உதாரணமாக ஈரத் துணியினால் கூட அழும். ஆகவே அழுகையை நிறுத்த காற்றோட்டம் நிறைந்த இடத்திற்குக் குழந்தையைக் கொண்டு செல்லலாம். இறுக்கமான உடையைத் தளர்த்தலாம். அழுகைக்குப் பல காரணங்கள் இருந்தால் கூட, தீவிர வியாதிக்கான நோய்க் குறியாக இதை எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. டாக்டர் அநேகமாகக் குழந்தைக்கு நோய்த் தொற்று ஏதேனும் காதிலோ மூக்கிலோ இருக்கிறதா என்பதை பரிசோதித்து வலியை குறைப்பதற்கும், குழந்தையைத் தூங்கச் செய்வதற்கும் மருந்துகளைக் கொடுப்பார்.

வயிற்றுப் போக்கைப் பொறுத்தவரை இது இயற்கையாகவே நோயை வெளியேறச் செய்யும் ஒரு முறை. ஆகவே தண்ணீராகப் பேதி எடுக்கும் போது, குடலிலுள்ளநோய் தொற்று வெளியே அகற்றப் படுகிறது. இதைக் கட்டுப் படுத்துவதற்கு மருந்துகள் கொடுக்கும்பொழுது, மலம் இறுகி, நோய் மேலும் பரவச் செய்கிறதே தவிர, நோய்த் தொற்று குறைவதில்லை. வயிற்றுப்போக்குக் காலங்களில், உடலிலிருந்து வெளியேறும் தண்ணீர் மற்றும் தாது உப்புக்களை, வாயின் வழியாக அளித்தாலே போதும். இதை 'ஓரல் ரீஹைட்ரேஷன் தெரபி' என்பார்கள். சாதாரணமாக பாக்டீரியா மற்றும் வைரஸ் கிருமிகளால் தான் வயிற்றுப்போக்கு ஏற்படுகிறது. இவற்றைக் கட்டுப்படுத்தத் தேவையான மருந்தைக் கொடுத்தாலே போதும்.

### 3. குழந்தைக்கு வலிப்பு நோய்:

குழந்தைகளுக்கு மூன்று வகையான வலிப்பு நோய்கள் வருகின்றன. முதல் வகை ஜுரத்துடன் ஏற்படும். நோய்க்குறி. சில குழந்தைகளுக்கு ஜுரம் அதிகரித்தால் வலிப்புவரும். இதை ஜுரம் தணிக்கும் மருந்தாலேயே தடுத்து விட முடியும். இரண்டாவது காக்காய் வலிப்பு. மூன்றாவது, ஜுரம் இருந்தோ, இல்லாமலோ வரும் வலிப்பு இத்துடன் சுயநினைவு இழத்தல்.

### 4. வலிப்பு இருக்கும்போது செய்ய வேண்டியவை:

ஈரத் துணியை நெற்றியில் வைத்து, ஜுரத்தைக் குறைக்க வேண்டும். அனுவசியமாகப் பதறாமல், குழந்தையை இறுகப் பிடித்துக் கொள்ளாமல், மிருதுவான படுக்கையில் கிடத்த வேண்டும். பக்கவாட்டில் படுக்க வைக்கலாம்; மல்லாக்கப் படுக்கப் போடக் கூடாது. ஏனென்றால், மூச்சுக் குழாயில் சளி இழுக்கப்பட்டு, குழந்தைக்கு மூச்சடைப்பு (asphyxia) ஏற்பட்டு விடும். வயதான குழந்தைகளுக்குத்தான் நாக்கைக்

---



பெங்களூரில் கன்னட சாகித்ய பரிஷத் என்ற அமைப்பு ஒவ்வொரு வருஷமும் ஒரு ஊரில் இலக்கிய மாநாடு நடத்துகிறது. இதில் என்ன புதுமை இருக்கிறது! அந்த மகாநாட்டில் சிறந்த எழுத்தாளரையும் அவர் துணைவியையும் அலங்கரிக்கப்பட்ட ரதத்தில் பூமாலை போட்டு உட்கார வைத்து ஊர்வலமாக அழைத்து வருகிறார்கள்.

—அனிதா [illegible]

கடித்துக் கொள்ளாமல் இருப்பதற்கு ஆவன செய்ய வேண்டுமே தவிர, பல் முளைக்காத சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு இது தேவையில்லை.

ஒரு முக்கிய விஷயம்: குழந்தைக்கு வலிப்பு ஏற்படும்போது, பார்க்க பயங்கரமாக இருந்தாலும், நீங்கள் பீதியடைந்து, அவசரப்பட்டுத் தவறான முறைகளைக் கடைப் பிடிக்கக் கூடாது.

இரண்டாவது வகை காக்கை வலிப்பு. இது ஜுரம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் வரக் கூடிய வலிப்பு. ஒரு வயதுக்கும் அதற்கு மேலும் ஆன குழந்தைகளுக்கு இது பெரும்பாலும் வரலாம்.

**தீவிர சிகிச்சை தேவைப்படும் வகையான வலிப்பு:**

பிறந்த குழந்தைக்கு வலிப்பு ஏற்பட்டால், தீவிரமான நோய்த் தொற்று உடலில் எங்கோ உள்ளது என்று கொள்ளலாம். உடனே வைத்தியம் செய்ய வேண்டிய கட்டம் இது. பிறந்த ஒரு மாதத்திலேயே வலிப்பு கண்டால், மூளையைப் பாதிக்கும் தன்மையுள்ளது இந்த வகைநோய்.

**காய்ச்சலுடன் வரும் வலிப்புக்கு:**

ஒவ்வொரு தடவைகாய்ச்சல் வரும் போதும் வலிப்பு ஏற்படும் குழந்தைகளுக்குத் தகுந்த மருந்தை மூன்று வருடங்கள் வரை பொறுமையாகக் கொடுத்துவர வேண்டும்.

எந்த வயதுக் குழந்தைக்கும் ஜுரம் இருந்தோ, இல்லாமலோ வலிப்பு ஏற்பட்டு, அத்துடன் நினைவும் இழந்தால் அது அபாயகரமான நோயின் ஓர் அறிகுறி. இரவு, பகல் என்று பாராமல் உடனே தீவிரமாகச் சிகிச்சை அளிக்கவேண்டும். இதைத் தவிர, வலிப்புடன் 105 டிகிரி காய்ச்சல் இருந்தாலோ, குழந்தையின் குணப்போக்கில் மாறுதல் ஏற்பட்டாலோ, அரை மணி நேரத்துக்குக் குறையாமல் வலிப்பு இருந்தாலோ — இவை யாவுமே அவசரமாகச் சிகிச்சை அளிக்கப்பட வேண்டியவை. இவை மூளை பாதிப்பைக் குறிக்கும்; தீவிர சிகிச்சை அளித்தால் தான் பயன் ஏற்படும்.

## 5. வாந்தி

குழந்தைகளில் இது சகஜம். பல காரணங்களால் வாந்தி ஏற்பட்டாலும், பொதுவாக அஜீரணத்தினால் தான் இது தோன்றுகிறது. வயிற்றுக்கு ஓய்வு அளித்து — அதாவது ஆகாரத்தை நிறுத்தி, குளிர்ந்த நீரை மட்டும் அவ்வப்போது அருந்தச் செய்தால் போதும். இத்துடன் தேனையும் ஒரு டீஸ்பூன் இரு டீஸ்பூன், பதினைந்து நிமிஷத்துக்கு ஒருமுறை, வாந்தி நிற்கும் வரை கொடுக்கலாம். டாக்டரிடம்ஆலோசனை பெற வேண்டிய கட்டங்கள்:

1. பச்சை நிறத்தில் வாந்தி எடுத்தல்.
2. சிறுகுடல் அடைப்புடன் (Intestinal) சேர்ந்த வாந்தி.
3. தவறுதலாக விஷம் அல்லது விளையாட்டுப் பொருள்களை விழுங்கி விடுவதால் ஏற்படும் வாந்தி.

இவை மூன்றிற்கும் தீவிர சிகிச்சை தேவையாக இருக்கும். வாந்தி நின்ற பிறகு, கரைத்த சாதமாகக் கொடுக்கலாம்.

## 6. இருமல் — சளி

காதிலோ, தொண்டையிலோ நோய்த் தொற்று இருந்தால் ஏற்படக்கூடிய அறிகுறி; சளியுடன் கூடிய இருமல்.

சிறு குழந்தைகளுக்கு இருமலைத் தடுத்து, சளியை வெளியேகொண்டு வரும் சக்தி கிடையாது. ஆகையால் இருமல் மருந்துகளை (Caugh mixture) கொடுக்க வேண்டாம். மருத்துவரின் ஆலோசனை இன்றி, இருமல், தடுப்பு மருந்துகளைச் சிறு குழந்தைகளுக்குக்கொடுக்கக்கூடாது. குழந்தைகளுக்கு வரும் இருமல், காச நோய்க்கான அறிகுறி அல்ல என்று பொதுவாகச் சொல்லலாம்.

## 7. வயிற்றில் பூச்சிகள்:

நடு இரவில் குழந்தை திடீரென்று வீறிட்டு அலறி அழுதால், அநேகமாக அது ஊசிப் புழுவினால் (பின் வர்ம்) ஏற்படும் உபாதை. ஆசன வாயை விலக்கிப் பார்த்தால், சின்னஞ் சிறிய வெள்ளைப் புழுக்கள் நெளிந்துகொண்டிருக்கும். இது தாய்ப் புழுக்கள் முட்டையிடும் காலத்தில் ஏற்படுகிறது. வெந்நீரால் ஆசன வாயைக் கழுவினாலே தற்காலிகநிவாரணம் கிடைக்கும். பிறகு தகுந்த மருந்துகள் மூலம் பூச்சிகளை ஒழிக்கலாம்.

இதேபோன்று, ஆறு அல்லது எட்டு அங்குல நீளமுள்ள நாக்குப் பூச்சிகள் வாய் வழியாகவோ, மலத்திலோ வெளிப்படும்போது குழந்தைக்கு வயிற்றில் உபாதை ஏற்படுகிறது. இதற்காகப் பயப்பட வேண்டியதில்லை. தகுந்த மருந்துகள் மூலம் இவற்றையும் ஒழித்து விடலாம்.

எப்போதாவது ஒரு முறை, இந்த நீண்ட புழுக்கள் சுருட்டிக் கொண்டு சிறுகுடலை அடைத்துக் கொள்ளும். அதனால் சில சமயங்களில் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டிய நிலை ஏற்படும். நல்ல வேளையாக இது அவ்வளவு சகஜமல்ல.

## 8. காய்ச்சல்

பெரும்பாலான காய்ச்சல்கள் வைரஸ் கிருமிகளால் தான் ஏற்படுகிறதே தவிர, பாக்டீரியா நோய்த் தொற்றினால் அல்ல. வைரஸ் காய்ச்சலுக்கு ஆண்டிபயாடிக் கொடுப்பது அவசியமில்லை என்று பலர் கருதுகிறார்கள். ஆனால் வைரஸ் காய்ச்சல் இருந்து, இரண்டு மூன்று நாட்களிலேயே பாக்டீரியாவின் நோய்த் தொற்றும் சேர்ந்து போய் விடுகிறது. ஆக, தகுந்த ஆன்ட்டிபயாடிக் அளிப்பது தவறு அல்ல. வைரஸ்




விலைமாதரை
மதிக்கலாம் —
அவர்கள்
வாழ்வைத்
தொலைத்துவிட்டு
வருமானத்திற்காக
'தன்' மானத்தை
மட்டும்
விற்பவர்கள்!
நடத்தை தவறுபவளை
மதிப்பது
இயலாது—
அவள்
வாழ்வை
பத்திரப்படுத்தியபின்
வாழ்வித்தவன்
மானத்தை விற்பவள்....
வீதிக்கு வந்தவளல்ல —
வீட்டுக்குள்
வீதியை இழுப்பவள்!
—கௌதம நீலாம்பரன்!

நுண்கிருமிக் காய்ச்சலை என்று கண்டுபிடிப்பது எப்படி? இது திடீரென்று வரும் ஒரு வகை ஜுரம். குழந்தை சாதாரணமாக விளையாடிக் கொண்டிருக்கும். திடீரென்று உடம்பில் உஷ்ணம் ஏற்பட்டுக் காய்ச்சலாக மாறிவிடும். ஆனால் பாக்டீரியாவினால் ஏற்படும் காய்ச்சலில், சிறிது சிறிதாக நோய்க்கான அறிகுறிகள் ஏற்படும்.

**9. ரயிலிலும் பஸ்ஸிலும் பயணம் செய்து கொண்டிருக்கும் போது குழந்தைக்குத் திடீரென்று வயிற்றுப் போக்கு ஏற்பட்டால்; விடாமல் அழத் தொடங்கினால்; திடீரென்று காய்ச்சல் வந்து விட்டால் — சமாளிக்கச் சில மருந்துகளைக் கைவசம் வைத்திருப்பது முக்கியம்:**

1. காய்ச்சலைக் குறைக்க, பாராஸிடமால் சிரப்; அல்லது பாராஸிடமால் மாத்திரைகள்.
2. வாய் வழியே கொடுக்க எலக்ட்ரோலைட் சொல்யூஷன்.
3. கோ — டிரை — மாக்ஸிஸோல் சிரப்.
4. குழந்தைக்கான தூக்க மருந்து.

இவை எந்த அளவில் கொடுக்க வேண்டும், எவ்வளவு முறை கொடுக்க வேண்டும் என்று டாக்டரிடம் முன் கூட்டியேசென்று தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

5. சர்க்கரையும், உப்பும் வயிற்றுப் போக்கைக் கட்டுப்படுத்த.

**10. பிரைமரி காம்ப்ளக்ஸ்:**

ஒரு குழந்தை, அதன் வயதிற்கேற்ப எடையை அடையாமல் இருந்தாலும், அடிக்கடி நோய்த் தொற்று வந்தாலும், விடாமல் அழுது கொண்டும், சிணுங்கி கொண்டும் இருந்தாலும், திடீர் திடீரென்று காய்ச்சல் ஏற்பட்டாலும், இந்தக் குழந்தை காச நோயினால் அவதியுறுகிறது என்று கணிக்கலாம். அதாவது பிரைமரி காம்ப்ளெக்ஸ் என்று இதைச் சொல்லுவார்கள்.

பொதுவாக இந்த நோய்க் கிருமி, குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் ஆயாவிற்குக் காச நோய் இருந்தால்; அல்லது வீட்டிலேயே தாத்தா — பாட்டி, பெற்றோர் இவர்களில் யாருக்கேனும் இருந்து, இவர்கள் மூலமாகக் காச நோய் நுண்கிருமி குழந்தைக்குத் தொற்றிக் கொண்டு விடுகிறது. சில சமயம் ஆஸ்த்துமா உள்ளவர்களிடம் இந்தக் காச நோய் நுண்கிருமிகளும் சேர்கின்றன. அவர்களுக்குக் காச நோய்க்கான வெளிப்படையாக அறிகுறிகள் இல்லாமலிருந்தாலும் குழந்தைக்குப் பரவக் கூடிய தொற்று இருக்கிறது. இதைத்தவிர, குடும்பத்தில் யாருக்கேனும் தொடர்ந்து இருமல் இருந்தாலும், இவர்களால் குழந்தைக்குப் பிரைமரி காம்ப்ளெக்ஸ் வரலாம். சில பரிசோதனைகள் மூலமாக, பிரைமரி காம்ப்ளெக்ஸ் இருக்கிறதா இல்லையா என்று ஊர்ஜிதம் செய்து கொள்ளலாம்.

**11. மான்டோ டெஸ்ட்:**

தோலுக்கு அடியில், ஊசியின் மூலம் ஒரு காச நோய் நுண்கிருமி கொண்ட பூரதத்தைச் செலுத்தி, அதன் மூலம் கண்டுபிடிக்கலாம். இதில் ஒரு குறை: செய்யும் முறையையும், உபயோகிக்கப்பட்ட மருந்தையும் பொறுத்து, இந்தப் பரிசோதனையின் பலன் அமைகிறது. இதனால் நான் பெரும்பாலான டாக்டர்கள், தாங்களே இந்தப் பரிசோதனை சரியா — தவறு என்று பார்த்துக் கொள்ளுகிறார்கள். இதைத் தவிர, எக்ஸ்-ரே மூலமாகவும், நோயிருக்கிறதா என்று கண்டுபிடிக்கலாம்.

**12. பிரைமரி காம்ப்ளெக்ஸுக்கு நிச்சயம் வைத்தியம் செய்துகொள்ள வேண்டுமா?**

இதற்கு வைத்தியம் செய்வது உங்களது டாக்டரையும், நோய்க்கான அறிகுறிகளையும், அதனால் பாதிக்கப்பட்ட குழந்தையையும் பொறுத்தது. சில சமயங்களில் தாய்மார்கள், "டாக்டர்கள் கூறியும், நான் என் குழந்தைக்குச் சிகிச்சையே அளிக்கவில்லை!" என்று கூறுவார்கள். இதில் அதிசயம் ஒன்றுமில்லை. ஏனென்றால் எல்லா பிரைமரி காம்ப்ளெக்ஸ் கேஸ்களையுமே வைத்தியம் செய்து கொள்ளத் தேவையில்லை. மேலும், வயது வந்தவர்களுக்கு, இளம் பருவத்தில் பிரைமரி காம்ப்ளெக்ஸ் இருந்த காரணத்தால்தான் டி. பி. நோய் வருகிறது என்பது கணிப்பு. இந்த நோயை ஒரே ஒரு மருந்து (I.N.H.) மூலமாக, அல்லது இரு மருந்துகளுடன் நன்றாகக் குணப்படுத்தமுடியும். எவ்வளவு நாட்கள் கொடுக்கவேண்டும் என்பதும், எவ்வாறு கொடுக்க வேண்டும் என்பதும், உங்கள் மருத்துவரைக் கலந்தாலோசித்துச் செய்ய வேண்டும்.

தொகுப்பாசிரியர்: **டாக்டர் வியாஸ்**
கட்டுரை வடிவம்: **சாருகேசி**

# வட்டமேஜை

● நடந்து முடிந்த இடைத்தேர்தலில் ஆளும் கட்சி மத்திய அரசுடன் இணைந்து அடித்த ஸ்டண்டுகளையும், முறைகேடுகளையும் அநீதிகளையும் அப்படியே அப்பட்டமாகப் பிட்டுப் பிட்டு வைத்துத் தலையங்கம் தீட்டிய ஒரே பத்திரிகை கல்கிதான்.

பெங்களூர்–21. குழந்தைகோமான்.

● கன்றைப் பலி கொடுத்த போதிலும் கண்ணீரைச் சொரிந்த வண்ணம் மடியி லிருந்து ஊற்றாகப் பால் பெருக்கெடுக்க நின்ற அந்த 'சந்தர்ப்ப எருமை' எதை நினைத்துக் கண்ணீர் சொரிந்திருக்கும்?' என்ற இறுதியில் அந்தக் கேள்வியின் பின்னணியில் தான் இந்த இரக்கமற்ற உலகைப் பார்த்து அவர் எத்தனை எத்தனை கேள்விகள் கேட்டுவிட்டார்? சிந்திக்க வைத்த கதை!

நெல்லை ஐயாறு எஸ். வாசுதேவன்.

● ஈ. எஸ். ஐ. ஆஸ்பத்திரியின் ''நவீனக் கட்டிடங்களால் மட்டும் நோய்கள் குணமாகாது' என்பதனையும் அங்கு சுகாதாரம் எப்படிச் செயல்படுகிறது' என்ற விவரங் களைத் தெள்ளத் தெளிவாக எடுத்துச் சொன்னதற்கு கெம்ப் இந்தியா லிமிடெட் தொழிலாளர்களின் சார்பில் எனது நன்றி.

கோயம்புத்தூர் டி. ராஜேந்திரன்.

● நினைவைச் சுமப்பவர்கள்' — தலைப்பைப் போலவே அழுத்தமான கனமான சிறுகதை!

திண்டுக்கல்–1, எஸ். பி. தியாகராஜன்.



● நேற்று இரவு 9.30 மணிக்கு விவித பாரதியில் 'நேரம் நல்ல நேரம்'' நிகழ்ச்சி யினைக் கேட்டேன். புதுக்கவிதைகளை எழுத விரும்பும் இன்றைய சமுதாய இளைஞர் களுக்கு வைரமுத்துவின் விளக்கங்கள் ஒரு வரப் பிரசாதம். விளம்பரம் ஒன்றைமட்டும் மனத்தில் கொள்ளாமல் சமுதாய இளைஞர் களுக்காகக் கல்கி செய்யும் தொண்டுகளில் மேலும் ஒன்று. பாராட்டுகிறேன்.

திருச்சி–3, எம். ஆர். பி. கணேஷ்.

● 'மாயூரம் தொகுதியில்'', ''தி.மு.க. வென்றபோது, அ. தி. மு. க. வென்றதாக வானொலி அறிவித்தது. இதைக் கேட்ட

## நேரம், ரொம்ப நல்ல நேரம்!

மாயூரம் தி. மு. க. தொண்டர் ஒருவர் அதிர்ந்து சிகிச்சைப் பெற்று வருகிறார். என்று தான் வானொலி திருந்துமோ?

அந்தணப்பேட்டை, அ. அன்பழகன்.

● குஜராத் சிறப்பிதழில் குறிப்பிடத் தக்க மற்றொரு செய்தி: அமரர் 'கல்கி' அவர்களின் வரலாற்று நாவல்களைக் குஜராத்தி எழுத்தாளர் கே.எம். முன்ஷியின் வரலாற்று நாவல்களுடன் ஒப்பீடு செய்து அண்மையில் டாக்டர் பட்டம் பெற்றுள் ளவர் திருமதி கலா. கே. தாக்கர். இவரும் தஞ்சாவூர் குஜராத்தி இனத்தைச் சார்ந் தவர்.

இவர் பணிபுரிவது குரோம்பேட்டையில் உள்ள மகளிர் வைணவக் கல்லூரியில். அதைத் தோற்றுவித்தவரும் (திரு. நாதுலால் பட்.) ஒரு குஜராத்தியர்.

சென்னை–48. ம. தி. மங்கையர்க்கரசி.

● ''இ. எஸ். ஐ.''–க்கும் அழுதுவிட்டு இவர்கள் தனியார் மருத்துவமனைகளையும், ''பிரைவேட் டாக்டர்களையுமே'' நாடுகி றார்கள்'' என்ற வரிகள் நூற்றுக்கு நூறு உண்மையே! டாக்டர்கள் நோயாளிகளைக் ''கவனிக்கும்'' நிலைமாறி, நோயாளிகள் டாக்டரைக் ''கவனிக்கும்'' நிலை ஏற்பட்ட பின்பு, ஈ. எஸ். ஐ. யின் அவலங்கள் அவ் வளவு சீக்கிரம் மாறுமா?

சென்னை–5, டாக்டர் வெ. சீதாராமன்.

● குஜராத்தை வளப்படுத்திய தென்னிந்தி யரைப் பற்றி எழுதும்போது பத்மவிபூஷண் டாக்டர் கே. ஆர். ராமநாதனை அவசியம் குறிப்பிட வேண்டும். சென்னை ராஜதானி கல்லூரி மாணவர், டாக்டர் ஸி. வி. ராமன்; டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் போன்றோ ரின் சகா. வானிலை இலாகாவில் சேர்ந்து அதன் டைரக்டர் ஜெனரலாகி ஓய்வு பெற்ற பின் தமது மாணவர் விக்ரம்சாரா பாயுடன் சேர்ந்து ஆமதாபாத்தில் பௌதிக ஆராய்ச்சிக் கழகத்தை நிறுவினார். இன்று இக்கழகம் உலகப் பிரசித்தி பெற்றுள்ளது. 600–க்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ள டாக்டர் ராமநாதன் இந்திய விண்வெளி விஞ்ஞானத்தின் தந்தை என்று கருதப்படுகிறார். 93 வயதில் இந்தப் பாலக்காடுக்காரர் இன்னும் ஓய்வுப்பணி களில் பலருக்கு உதவி வருகிறார்.

பாலக்காடு–33. வி. எஸ். மணி அய்யர்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)



✖ அபூர்வமான சடை வடிவம் கொண்ட நடராஜமூர்த்தி

# பொன்னாசை தீர்த்த சுயம்பிரகாசர்

**கொ**ங்கண சித்தர் என்று ஒரு * சிவனடியார் இருந்தார். அஷ்ட மகா சித்திகளும் எளிதாகக் கைகூடி வந்தது அவருக்கு. பொன்னாசை யாரை விட்டது. தாமிரத்தைத் தங்கமாக்கும் இரச வாதத்தைப் பல முறை செய்து பார்த்தார். இரும்பு முதலிய நவலோகங்களும் சூதம், இலிங்கம், அரிதாரம் முதலிய இரசவாதத்துக்குரிய பொருள்களோடு சேர்ந்தால் பொன்னாகிறது என்று தெரிந்து கொண்டார். பதினாறு மாற்றுத் தங்கம் கிடைத்தது. இன்னமும் உயர்ந்த மாற்றுப் பொன் வேண்டுமென்று முயன்றார். நூறு மாற்று வரை ஏறியது.

தஞ்சைப் பதி சென்று பிரகதீசுவரரைப் பூஜித்தார். ''உன் ஆசையைப் பாண்டிய நாட்டில் நிறைவேற்றுகிறோம்'' என்று ஈசன் அருளினார். உடனே பாண்டிய நாட்டுக்குக் கிளம்பி விட்டார் சித்தர். அங்கே ஒரு காட்டில் தங்கி விளாதி என்ற பச்சிலைச் சாற்றைப் பிழிந்து உலோகங்களை அக்கினியில் காய்ச்ச ஐந்நூறு மாற்றுப் பொன் கிடைத்தது. சித்தருக்குத் திருப்தி உண்டாகவில்லை.

அற்புத சித்திகளைப் பெற்றிருந்தும் கொங்கண சித்தருக்கு ஆசை ஒழியவில்லையே என்று மனமிரங்கினார் சிவபெருமான். காட்டில் திரிந்து பச்சிலைகளைத் தேடிக்கொண்டிருந்த சித்தரின் முன் ஒரு முனிவராகத்தோன்றி ''ஏன் கவலையாக இருக்கிறாய்?'' என்று கேட்டார். ''சுவாமி! ஆயிரம் மாற்றுப் பொன் கிடைக்க வேண்டும் என்று ஆசை'' என்றார் சித்தர்.

''மதுகபுரம் என்ற தலத்தில் சென்று அங்கே கோயில் கொண்டுள்ள தான்தோன்றீசுவரரை பூஜித்தால் உன் ஆவல் கைகூடும்'' என்றுகூறிமறைந்து விட்டார் முனிவர். அருகிலேயே இருந்த அந்தப் புண்ணியத் தலத்தை அடைந்து பிரும்ம தீர்த்தத்தில் நீராடித் தான்தோன்றீசுவரரைப் பூஜித்து வணங்கியதும் ஆயிரம் மாற்றுத் தங்கத்தை விட ஆயிரங்கோடி மடங்குபிரகாசமாய் ஒளிவீசிக் கொண்டு கொங்கண சித்தருக்குக் காட்சியளித்தார் சுயம்பிரகாச மூர்த்தி. பன்னிரண்டு ஆதித்தர்களின் ஒளியும் அப்போது மின்மினியின் ஒளிபோலத் தெரிந்ததாம்.

அந்தப் பேரொளியில் மூழ்கிய பேரின்பமானது கொங்கண சித்தரின் உள்ளத்தை நிரப்பி விடவே அங்கே வேறு எதற்குமே இடமில்லாமல் போய்விட்டது.

சித்தர் ஐந்நூறுமாற்றுப் பொன்னெடுத்த மாற்றூரில் ஐந்நூற்றீசுவரர் என்ற திருநாமத்தோடு கோவில் கொண்டிருக்கிறார் ஈசன். சுயம் பிரகாச மூர்த்தியாய் கொங்கணசித்தருக்கு காட்சியளித்து பொன்னாசையை நீக்கிய தலம் மாற்றூருக்கு அருகிலேயே இருக்கிறது. இப்போது இலுப்பைக்குடி என்ற பெயரால் வழங்குகிறது. இந்த இரட்டைத் தலங்களும், நகரத்தார் பெருமக்களின் ஒன்பது கோவில்களைச் சேர்ந்தவை.

திரைகடலோடியும் திரவியம் தேடு என்பதைக் கடைப்பிடிப்பவர்கள் நகரத்தார். பொருள் ஈட்டுவதையே பெருமையாகவும் தர்மமாகவும் நினைக்கும் நகரத்தாருடைய கோவிலில் இவ்வாறு ஒரு தலபுராணம் இருப்பது வியப்பளிக்கிறது அல்லவா? இந்த தலபுராணம் உணர்த்தும் மனப்பக்குவத்தைப் பெற்றிருப்பதால் தான் நகரத்தார் பெருமக்கள் செல்வம் ஈட்டும் திறனுடன்



✖ மாற்றூர் ஐநூற்றீசுவரர் கோயில்

...கோடையுள்ளாமும் கொண்டிருக்கிறார்களோ?

இராமநாதபுரம் மாவட்டத்தில் காரைக்குடியிலிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவில்அமைந்துள்ள தலங்கள் இவை. பேருந்து வசதி அதிகமாகக் கிடையாது. கார் வசதியுள்ளவர்கள் சுலபமாகப் போய் வரலாம்.

இலுப்பைக் குடியை நெருங்கியதும் முதலில் கவனத்தைக் கவர்ந்தது இரண்டு விஷயங்கள். கத்தரி வெய்யில் தொடங்கிஇரண்டு நாட்கள் ஆகியிருந்தும் குளுமையாக இருந்தது. அடுத்தபடி கருத்தைக் கவர்ந்தது கண்களைக் குளிர்வித்த காட்சியை நேரில் பார்த்துத் தான் அனுபவிக்க வேண்டும். இரட்டைக் குளங்கள். நடுவில் பிள்ளையார் கோவில். இரண்டிலும் நூற்க்கணக்கான செந்தாமரை மலர்கள். நன்றாக மலர்ந்தும், இதழ்கள் சிறிது விரிந்தும், பருத்துக் கூம்பியும், சற்றுச் சாய்ந்தும், உயரே நிமிர்ந்தும் காணப்பட்ட அந்த மலர்களைப் பார்த்த போது ஏன் எல்லாத் தெய்வங்களையும் தாமரை மலர் மீது ஏற்றி வைத்து வழிபட்டார்கள் நம் முன்னோர் என்பதுபுரிந்தது. ரஸிகத் தன்மைதான் காரணமாக இருந்திருக்க வேண்டும்.

தாமரைக் குளத்தை ஒட்டியுள்ள கோபுரவாசல் வழியாகக் கோவிலுக்குள் போனால் நேர் எதிரே வடிவுடையம்மன் சந்நிதி இருக்கிறது! அடுத்ததாக பைரவர் சந்நிதி. இடது புறம் கொங்கண சித்தருக்கு ஜோதி மயமாகக் காட்சியளித்த சுயம்பிரகாச மூர்த்தி. சமீப காலத்திருப்பணி என்பது சிற்பங்களைப் பார்க்கும் போது தெரிகிறது. நுணுக்கமானவேலைப்பாடுகள் செய்யப்பட்ட தூண்கள்.

ஒவ்வொரு சிற்பத்தையும் ஊன்றிப் பார்த்து அவற்றின் விசேஷத்தை அறிந்து வைத்திருக்கிறார் ஸ்ரீ கல்யாண சுந்தரகுருக்கள். மிகவும் பெருமையோடு கோவிலைப் பற்றிய விவரங்களையும் கொங்கண சித்தருடைய கதையையும் கூறினார். அவருடைய ஊக்கமும், உற்சாகமும் நம்மையும் தொற்றிக் கொள்கிறது. முதலில் உற்சவ மூர்த்திகளைத் தரிசிக்கிறோம். அபூர்வமான சடையை உடைய நடராஜ மூர்த்தியைக் காண்கிறோம். பின்னர் ரசவாதம் புரிந்த கொங்கண சித்தரைத் தரிசிக்கிறோம்.

ஒவ்வொரு தூணைக் காட்டுகிறார் குருக்கள். ''இந்த விநாயகரைப் பாருங்கள்'' என்று தாமரை மலரின் மத்தியில் உள்ள சிறிய கணபதியைக்காட்டுகிறார். மலருக்கு மத்தியிலிருந்து பூக்குடலையுடன் வெளியே வரும் கந்தர்வன். மறைவான இடத்திலிருக்கும் காயத்ரி அம்மன். சுவாமி கோவிலின் நிலைக்கு மேலே ராவணன் கைலையைத் தூக்குவது முதலியவற்றைச் சுட்டிக் காட்டினார். பிராகாரத்தில் உள்ள நெடிய லிங்கத்தைப்பார்க்கிறோம். அந்த லிங்கத் திருமேனியிலேயே கொங்கண சித்தர் சிவபூஜை செய்யும் கோலத்தைக் காண்கிறோம். ராஜகோபுரத் திருப்பணி நடந்து வருகிறது.

**கொ**ங்கண சித்தருடன் தொடர்புடைய இன்னொரு தலம் அருகிலேயே இருக்கிறது. மாற்று உரைத்துப் பார்த்த ஊராதலால் மாற்றூர் என்று பெயர். மகிழமரம் ஸ்தல விருக்ஷம். பூக்கும், ஆனால் காய்க்காது. அதற்கு அங்கே உலவும் முனீச்வரர் தான் பொறுப்பு என்று கூறுகிறார்கள்.

மாற்றூரில் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார் குருக்கள். மணிகளின் ஓசை முழங்க ஒவ்வொரு சந்நிதியாக ஓடி, ஓடித் தீபாராதனை செய்து கொண்டு போகிறார். கூடவே ஒருவர்

**ஆனந்தி**



✖ கொங்கணசித்தர்
—இலுப்பைகுடி

நைவேத்ய பாத்திரத்தை எடுத்துக் கொண்டு போகிறார். ஒரு சிறுவன் விளக்கைத் தூக்கிக்கொண்டு போகிறான். ஒரு முழம் புஷ்பம் அணிவித்து, நைவேத்யம் செய்து, தீபாராதனை காட்டுகிறார்.

இந்தக் கோவிலிலும் சில அபூர்வமான விக்ரகங்களைப் பார்க்கிறோம். நான்கு சிம்மங்கள் தாங்கும் நந்திகேசுவரரை இங்கே காணலாம்.

சுவாமி பெயர் ஐந்நூற்றீசுவரர். அம்பாள் பெரிய நாயகி.

அருள்மிகு தக்ஷிணா மூர்த்தியின் சந்நிதியில் சிங்கத்தின் வாயில் பந்து உருள்கிறது.

இந்தக் கோயிலுக்குத் திருப்பணி செய்தவர்களில் பாதரக்குடி சாமியார் முக்கியமானவர்.

மாற்றூர் கோவிலில் பல ஸ்வரங்கள் ஒலிக்கும் பதினாறு மணிக்கொத்து இருக்கிறது. கோவில் சுத்தமாக இருக்கிறது.

கோவிலைச் சுத்தம்செய்து கொண்டிருந்தார், ஒரு இளம் பெண்மணி. வறுமையின் எல்லையில் இருப்பவராகத் தோன்றியது. புத்திர சம்பத்து இருக்கிறது என்று கூறினார். நைவேத்தியம் செய்த பழங்களை அவர் கையில் கொடுத்தேன், குழந்தைகளுக்காக. வாசலில் வந்த போது ஒரு அழகான பசு மண்டபத்தில் நுழைந்து வந்தது. சை... விருந்த பழங்க... ''இந்தாம்மா'' என்று

வுக்குக் கொடுத்தார் அந்தப் பெண்மணி. பசு அவரைத் தொடர்ந்து வந்தது. ''நாளைக்குத் தரேம்மா, போய்ட்டு வா'' என்று அவர் கூற அது தலையை ஆட்டிவிட்டு அங்கேயே முளைத்திருந்த புல்லை மேயச் சென்றது. இந்தக்கருணையில் தெய்வத்தையே கண்டது போல் விம்மிதமடைகிறது நெஞ்சம்.

காரைக்குடி திரும்பும் வழியில் கண்டனூர் என்ற ஊர் இருக்கிறது. அங்கே பெருமாள் கோவில், சிவன் கோவில் இரண்டும் இருப்பதைக் காணலாம். உச்சிப் போதாகி விட்டபடியால் பெருமாள் கோவிலை மட்டும் தரிசனம் செய்ய முடிந்தது. இங்கே ஸ்ரீநிவாசப் பெருமாள் குடி கொண்டிருக்கிறார். தாயார் அலர்மேல் மங்கை. தாயாருக்கும் ஸ்ரீ ஆண்டாளுக்கும் சந்நிதிகள். பிரயகாரச்சுவர்களில் நவீன காலத்துச் சித்திரங்கள்.

பிராகாரத்தில் ஒரு கல்லாஸனத்தில் மூன்று விக்ரகங்கள் எழுந்தருளியிருப்பதைக் கண்டோம். விகநஸர், விஷ்வக்ஸேனர், நம்மாழ்வார் என்று எழுதப்பட்டிருக்கிறது. விகநஸர் என்ற பெயர் புதிராக இருக்கிறது..

இந்தக் கோவிலைக் கட்டிய திரு. வீரப்பச் செட்டியார் வீடு பெருமாள் கோவிலார் வீடு என்றே அழைக்கப்படுகிறது. கோவில் கட்டியவர்களை நகரத்தார் எப்படியெல்லாம்பெருமைப்படுத்துகிறார்கள்!

புகைப்படங்கள்:

கே. சொக்கலிங்கம்

# பிருந்தாவுக்கு பி.காம். கிடைக்குமா?

இந்த வாரம் சென்னை பல்கலைக் கழக மாணவர் தகவல் மையத்துக்குப் போய் திருமதி. சுசீலா மாரியப்பன் அவர்களைச் சந்திக்கலாமா?

தமிழ்நாட்டில் உள்ள சென்னை, மதுரை – காமராஜ், பாரதியார், பாரதிதாசன், அண்ணாமலை ஆகிய பல்கலைக் கழகங்களின் கீழுள்ள சுமார் 100 கல்லூரிகளில் பி.ஏ., பி.எஸ்ஸி, பி.காம் பட்டப்படிப்புகள் சொல்லித் தரப்படுகின்றன.

பி.ஏ., பி.எஸ்ஸி இரண்டுக்கும் ஆங்கிலம் தவிர, ஒரு மொழிப் பாடம் கட்டாயம். பி.காமுக்கு ஆங்கிலம் மட்டுமே. மொழிப் பாடம் இல்லை.

சயன்ஸ் பட்டப் படிப்புகளில் சேர, 'பிளஸ் டு'வில் சயன்ஸ் குரூப் எடுத்திருக்க வேண்டும். பி.ஏ.வில்சேர, எந்த குரூப் எடுத்திருந்தாலும் பரவாயில்லை. பி.காம் சேர காமர்ஸ் படித்திருக்க வேண்டும்.

பி.ஏ., பி.எஸ்ஸியில் பல பிரிவுகள் உண்டு. எல்லாக் கல்லூரிகளிலும் எல்லாப் படிப்புகளும் சொல்லித் தரப்படும் என்று சொல்ல முடியாது. எனவே அந்தந்தக் கல்லூரி தகவல் புத்தகத்தைப் பார்த்துத்தான் முழு விவரங்களறிய முடியும். இது ஐந்து முதல் பத்து ரூபாய் வரை ஆகும். அப்ளிகேஷன் பாரத்துடன் பிராஸ்பெக்டஸ் என்ற இந்தத் தகவல் புத்தகத்தையும் தருவார்கள். இதில் கல்லூரியில் சொல்லித் தரப்படுகிற பாடங்கள் பற்றிய விவரங்கள் தவிர, கட்டண விவரங்களும் இருக்கும்.

ஏதாவது வேலைக்கு வாய்ப்பிருந்தால் வேலை பார்த்துக்கொண்டே படிக்க மாலை நேரக் கல்லூரிகள் உள்ளன. கல்லூரிகள் தத்தம் வசதிக்கேற்ப ஒரு சில பாடங்களை மாலை நேரக் கல்லூரிகளில் சொல்லித் தருவார்கள். சில கல்லூரிகளில் இதற்கென தனித் தகவல் புத்தகம் உண்டு.

பொதுவாக, வெவ்வேறு பட்டப்படிப்புக்குத் தனித் தனிஅப்ளிகேஷன் பாரங்கள் தான் வழங்கப்படும். மாலை நேரக் கல்லூரிக்கான பாரமும் தனிதான்.



சுசீலா மாரியப்பன்

இன்னொரு விஷயம்: ஒரே ஒரு கல்லூரியில் ஒரே கோர்ஸுக்கு விண்ணப்பித்து ரிஸ்க் எடுக்காதீர்கள். உங்கள் போதாத நேரம், அங்கே இடம் கிடைக்கவில்லையெனில், உங்கள் வாழ்க்கையில் ஓராண்டு பாழாகலாம்.

இந்தப் பட்டப்படிப்புகளைப் பொறுத்தவரை இண்டர்வியூவெல்லாம் கிடையாது. மார்க்கை வைத்து(?) நேரடியாக அட்மிஷன் தான். அட்மிஷன் சமயத்துக் கட்டணம் கல்லூரிக்குக் கல்லூரி வேறுபடும்.

விண்ணப்பத்துடன் எஸ்.எஸ்.எல்.ஸி. புத்தக முதல் பக்கம், நன்னடத்தை சான்றிதழ், மார்க் ஷீட் இவற்றின் பிரதிகள், மற்றும் டி.ஸி. இவையெல்லாம் அனுப்ப வேண்டும். பாஸ்போர்ட் சைஸ் போட்டோ ஒட்ட வேண்டியிருக்கும். கம்யூனிட்டி சர்ட்டிபிகேட் (எஸ்.ஸி. எஸ்.டி. மற்றும் பிற்படுத்தப்பட்ட பிரிவினருக்கு) தேவை.

ஒரு சின்ன அட்வைஸ்: எந்தக் கோர்ஸ் ஆனாலும் பாஸ்போர்ட் சைஸ் போட்டோ அவசியம். எனவே அப்ளிகேஷன் வாங்கும் வரை காத்திராமல், உடனடியாகப் பொடி நடையாய் ஸ்டுடியோவுக்குப் போய் ஐந்தாறு பிரதிபாஸ்போர்ட் சைஸ் போட்டோக்களை எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். இது கடைசி நிமிட அவசரத்தைத் தவிர்க்கும்.

## இன்ஃபர்மாக்ஸ்

மாணவர் தகவல் மையம் இந்தியாவெங்கும் உள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களிலும் அளிக்கப்படும் பட்ட, மேல்பட்ட, மருத்துவ, பொறியியல் படிப்புகள் பற்றிய விவரங்களைத் தனித்தனியே புத்தகங்களாய் வெளியிட்டுள்ளது. தகவல் அறிய விரும்புவோர் இக்க மையத்துடன் தொடர்பு கொள்ளலாம். மேலும் இந்தத் தகவல் மையம் 'ஆண்டுதோறும், மார்ச் ஏப்ரலில் 'என்ன படிக்கலாம்? எங்கே படிக்கலாம்?' என்னும் விவரங்களை எடுத்துச் சொல்லி, வழிகாட்டும் வகையில் 'இன்ஃபர்மாக்ஸ்' எனும் கண்காட்சியை நடத்துகின்றது. இது நடக்கும்போது மாணவர்கள் இதை ஒரு ரவுண்டு அடித்தால் பயனளிக்கும்.

-எஸ். சந்திரமௌலி

# வெள்ளித்திரை

**சிவாஜி :**

தேவையா எனக்கு — இந்த மாதிரியான ரெண்டுங்கெட்டான் பாத்திரம்? கட்டபொம்மன் மீசையும், கர்ஜனை செய்கிற குரலுமாய் வெறுமனே வந்து போகிற மாதிரி அல்லவா ஆகிவிட்டது, ச்சே! செய்யாத கொலைக்கு ஊர்ப்பழி வந்து சேர்கிற போதெல்லாம் அதைச் சிந்தித்துக் காரணம் அறிந்து சரிசெய்யாமல் விட்டு விட்டு, கடைசியில் திடீரென்று, மனசாட்சி வேஷம் போட்டுப் பேசுகிற டயலாக் எவ்வளவு கேலிக் கூத்து? மார்பில் மூன்று குண்டுகள் பாய்ந்து ரத்தம் கசிகிற போதும், சண்டையிட்டு வில்லனைத் தூக்கிக்கொண்டு வந்து தங்கையின் காலடியில் போட்டு விட்டு, ஆறு பக்கத்திற்கு உருக உருக வசனம் வேறு பேசுகிற அந்த க்ளைமாக்ஸ் என்னைக் கிண்டல் செய்ய வேண்டியே அமைத்த மாதிரி இருக்கிறதே, எனக்கு ஏன் முன்பே தோன்றாமல் போயிற்று?

இப்பொழுது எண்ணி எண்ணி மறுகுவதால் என்ன லாபம்? — இனிமேலாவது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.



## சரித்திர நாயகன்





**சாரதா :**

ரொம்ப நாளாயிற்றே தமிழில் நடித்து என்று ஆசையாய் ஏற்றுக் கொண்ட வேஷத்தை நினைத்தால் எனக்கே துக்கமாக இருக்கிறது. கணவனைக் கொன்றவனைப் பிள்ளையைக் கொண்டே பழி தீர்க்கிறேன் என்று சவால் விட்டுவிட்டு, அவன் பி.ஏ. படித்து விட்டு வரும் வரை கோடாலியும், கடப்பாரையுமாய் நிற்கிற அம்மா பாத்திரம் எனக்கு!

'பாண்டிய மகாராஜா' என்று நாக்கு தடிக்கிற குரலில் கத்திவிட்டு, முன்னங் காலைத் தூக்கி அலட்சியமாய் முன்வைத்தால் நன்றாயிருக்கும் என்று எண்ணப்போக, தியேட்டரே சிரிக்கிற மாதிரி ஆகிவிட்டதே! கத்தி, ராஜ பரிபாலனை, டிஸ்கோ, துப்பாக்கி, மாட்டு வண்டி, மோட்டார் கார் என்று எல்லாவற்றையும் போட்டுக் குதப்பிய ஒரு படத்தில், காலகட்டம் புரியாத குழப்பத்தோடு அமைக்கப்பட்ட கதைக்கு நானும் சிவாஜி சாரும் எத்தனை முயன்றாலும் உயிர் கொடுக்க முடியாது என்று எனக்கும் புரியாமல் போயிற்றே... நான் என்ன செய்வேன்?

—ஜெயமன்மதன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Editor; K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka